# மாரி வாயில்



ச. சோமசுந்தர பாரதி, எம்.ஏ., பீ.எல்.

# மாரி வாயில்



ஆக்கியோர்

**ச. சோமசுந்தர பாரதி,** எம். ஏ., பீ. எல்.,
உயர் நீதிமன்ற வாதி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதித்
தலைமைப் பேராசிரியர்.

வித்வான்
தி. போ. பழனியப்பப் பிள்ளையவர்கள்
குறிப்புரையுடன்

சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை,
சென்னை.

1936

# பொருளடக்கம்

# முன்னுரை

'மாரிவாயில்' என்பதற்கு, மேகத்தைத் தூதனுப்பல் என்பது பொருள். மாரி-மேகம். மாரி, மழை, வானம், விண், முகில், மஞ்சு, கொண்மூ, கொண்டல், எழிலி என்ற பலவும் மேகத்தின் பெயர்கள். வாயில்-தூது. "வாயி லுசாவே தம் முளுமுரிய" என்ற தொல்காப்பியச் சூத்திரமும் வாயில் தூது குறிக்கும் என்பதைத் தெளிக்கும். மேகத்தைக் காதற் றூதனுப்புவதாகச் செய்யுள் செய்வது பண்டைப் புலனெறி வழக்கு. காதலர் தம்முள் தூதுரைக்கக் கொள்ளற் பாலவற்றுள் மேகமும் ஒன்றுகும்.

> "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
> பயம்பெறுமே கம்பூவை பாங்கி—நயந்தகுயில்
> பேதைநெஞ்சம் தென்றல் பிரமரமீ ரைந்துமே
> தூதுரைத்து வாங்குந் தொடை."

என்ற புகழேந்திப் புலவரின் இரத்தினச் சுருக்க வெண்பா வால் இஃது இனிது விளங்கும்.

இவ்வகைப் பிரபந்தங்களுள், வடமொழியில் காளிதாச கவி யியற்றிய 'மேகசந்தேசம்' பிரபலமானது. அது குபே ரனது கோபத்தால் ஓராண்டு ஊரைவிட்டு விலகி யிருக்க நேர்ந்த ஒரு கந்தருவன் தன் காதல் மனைவிக்கு மேகத்தைத் தூதனுப்பியதாகப் புனைந்துரைக்குஞ் செய்யுள். இம்மாரி வாயிலும் பாண்டவருள் நடுப்பிறந்த பார்த்தனுக்கு, அவன் தமிழ் மனைவியான பாண்டியன் மகள் மாரியைத் தூதனுப் பியதாகக் கற்பித்துக் கூறுகிறது.

"பார்த்தன் தீர்த்த யாத்திரையில் சித்திராங்கதை யென்ற பாண்டியன் மகளைப் பார்க்கின்றான்; கண்டாங்கே

ஒருவரை யொருவர் காதலித்து அரசனனுமதியோடு மணந்து, மதுரையிற் சிறுபோது கூடிவாழ்கின்றனர். அவர்கள் காதல் மணத்தின் பயனுகப் பப்புருவாகனன் என்றொரு மகன் பிறக்கின்றான். பிறகு அருச்சுனன் மனைவியையும் மகனையும் மதுரையில் விட்டு, குமரியில் நீராடி வருவதாகப் பாண்டியனிடம் விடை பெற்றுப் போனவன் மீளாமல் வாளா வடக்கே தன் இந்திரப்பிரத்தபுரிக்குச் செல்கின்றான்''.-என்றொரு வரலாறு பாரதக் கதையில் வருகிறது. அதை யடிப் படையாகக் கொண்டு இம்மாரிவாயில் ஒரு புதுக்கதை புனைகின்றது. அது வருமாறு:—

மணந்த கணவன் தன்னைத் தணந்து போனபின், பிரிவாற்றாத அவன் தமிழ் மனைவி கூடலில் (மதுரையில்) தன் தனி வாழ்க்கையை வெறுத்து, பார்த்தன்போன குமரிப்பாக்கத்திற்குச் சென்று, அங்கே கன்னிக் கடவுளை வழிபட்டு, தன் காதலன் தீதிலனுய்த் திரும்பித் தன்னொடு வாழும் பேறு வேண்டி வரங் கிடக்கின்றாள். கார்காலத் துவக்கத்தில் கடலில் காலையில் நீராடுபவள், கீழ்வானத் தடிவாரத்தில் தேர்போல ஊர்கின்ற ஒரு காரைக் காணுகின்றாள். முதலில் அதை, தன்கொழுநன் அவன் தந்தையான இந்திரனூருக்குச் சென்று மீளுந் தேரெனக் கருதிக் களிக்கின்றாள். பிறகு தான் கிழக்கே காணுவது தேரன்று, காரே யெனத் தன் தோழி தெரிக்கத் தியங்கிக் கவன்று மயங்குகின்றாள். தோழி தேற்றச் சிறிது தெளிந்து, அம்மழையை அழைத்துத் தன்காதற் கணவனுக்குத் தூதனுப்பத் துணிகின்றாள். காரி என்ற இந்திரனுக்கு மாரிவாகனமாகவே, அச்சுரபதிமகனுன நரபதி - பார்த்தனுக்கும் மேகத்துக்கும் ஒருவகையிலுறவுண்மையை எண்ணுபவளானுள். அஃதன்றியும், மேகத்துக்குத் தன்பாலன்பு வளரநேர்ந்த முன்னிகழ்ச்சியொன்றனையும் நினைப்பாளாயினள். தென்னர் குடி

யில் முன்னோனை வடிம்பலம்ப நின்ற பாண்டியனால் மாரி மதுரையில் தளையிடப்பட்டதைத் திருவிளையாடல் தெரிவிக்கின்றது. பின்மேகம் சிறைவீடு பெற்ற செய்திக்குக் காரணம் யாரும் யாண்டும் கூறிற்றிலர். பாண்டியன் மகள் பார்த்தனை மணந்த பெருமங்கல விழாவில் அவள் அளியால் மாரி தன் தளைகளைந்து விடுதலை பெற்றது. அவ்வுதவிக்கு நன்றி மறவாமல் அப்பாண்டியன் மகள்பால் அன்புடைய மாரியை அவளழைத்து அதன்வேந்தன் மகன் பால் தூதனுப்பினால் அது விரும்பிச் சென்று விரைந்து மீளுமென்று சூழ்ந்து துணிகின்றாள். உடனே அவள் அம்மாரியை யழைத்து அருச்சுனனுக்குத் தன் தனிப்படர் மெலிவும் தணியாக் காதலுங்கூறி அவனைத் தன்னொடு மீட்டுங் கூட்டிவைக்குமாறு வேண்டுகின்றாள். மாரியும் தனக்கு அவள் முன் செய்த உதவியை வியந்து அன்றவள் சொன்ன வனைத்தையும் நயந்து கேட்டு, விண்வழி விரைந்து சென்று பாண்டவர் பதியணுகி, அற்ற நோக்கி அருச்சுனனுக் கறிவிக்கின்றது. அவனும் உவந்து கேட்டுத் தன் தமிழ்ப்பெருமனையாள் தகவுபாராட்டி, தன்னுளத் தவள்பால் தழையும் காதலை வற்புறுத்துகின்றான். தான் தன் தமையனான தருமன் அரசியல் பெருக அவன் ஆணையால் அவன்பகைவரைப் பொருதடக்கும் கடன் முறைகளாற்றி வருவதையும், அது முற்றுப் பெறும்வரை தான் தென்னர் நாட்டுக்குத் திரும்பக் கூடாமையையும் எடுத்துரைத்து, தன் அறக்கடனைத் தாழாது முடித்துப் பின்னர்த்தான் அவளொடு பிரியாதுறையவருவதாயும் செப்பி அவளைத் தேற்றி ஆற்றுவிக்குமாறு மாரியைத் திரும்பவிடுகின்றான். மாரியும் மீண்டு வந்து அவளுக்கு அவனுரைத்த மாற்றம் உணர்த்துகின்றது. இதுவே இப்பிரபந்தம் கூறும் பொருளாம்.

இனி, கலிவெண்பாட்டாலன்றி விருத்தப் பாவால் தூதுரைப்பது தவறெனவும், பிரிந்த காதலருக்கு இருந்து வருந்துவோர் தூதரைத் தம் காதல் சென்றுரைக்க ஒது வதோடமைவதன்றி, தூதுசெல்பவர் கூற்றும், வாயில் பெறுபவர் வழங்கு மாற்றமும் தூதுபாடுவோர் சொல்லுதல் மரபன்றெனவும் புலவர் சிலர்புகல்வதுண்டு. அது தொல்லை யிலக்கண மிறந்து நல்லமரபுகள் மறந்த பிற்கால வழக்குடை யார் வாதமாகும். தூதுச் செய்தி கலிவெண்பாவிலமைதல் வேண்டுமென்ற விதி இலக்கண விளக்கத்திலன்றி வேறு நூல்களில் வற்புறுத்தப்படாதது சிந்திக்கத்தக்கது. இலக் கண விளக்க ஆசிரியர் காலத்தில் சில தூதுப் பிரபந்தங்கள் கலிவெண்பாவில் அமைந்திருந்த காரணத்தால் அந்நூலிலவ் வாறு கூறப் பெற்றிருக்கலாம். மற்றப்படி வேறிலக்கண நூல்களில் அவ்வாறு வரையறுக்கப் படாததோடு, பெரும் பாவலர் புலவர்க்கு விருந்தெனத்தரும் அருந்தமிழ்த் தூது கள் விருத்தப்பாவினுல் விளங்குவதைக் கருத்திலிருத்தி யாராய்வார் உண்மையறிவார். நளன் தமயந்திக்கு அன் னத்தை யனுப்பிச் சொன்ன தூது - விருத்தம் வெண்பா என்றிருபாவிலும் பொன்றுது நிலவல்கண்டு புகழ்கின்றோம். அப்பாக்களில் தூதுபாடிய அதிவீரராம பாண்டியரும் புக ழேந்திப் புலவரும் மரபறியாரென்றுரைக்கும் வழக்கா றுண்டோ? சீதைக்கு அநுமனைத் தூதனுப்பிய செய்தியைக் கம்பரும், குணமாலைக்குக் கிளியைத் தூதனுப்பிய வரலாற் றைத் திருத்தக்கதேவரும் விருத்தப் பாவால் விளக்கி விரித் தது பொருத்தமன்றெனப் புகல்வாருளரோ? புலமைக் கிலக் காமித் தலைமைப் பாவலர் தத்தம் தூதுரைப்பாட்டில் மாதர் செப்பிய காதற் செய்தியைத் தூதர் சென்றுரைத்ததும், அதைக் கேட்டவர்கிளந்த மாற்றங்கொண்டு மீட்டுவந் துரைத்த செவ்வியு மெல்லாம் பாடித் தமிழைப் பீடுபெறச்

செய்துளார். ஆதலால் இம்மாரிவாயிற் பாட்டும் செய்தியும் மரபு பிறழா வழக்காறுடைத்தெனத் தமிழர் தள்ளாது கொள்ளத்தகும்.

இந்தப் பிரபந்தம் எழுத நேர்ந்த வரலாற்றை இங்கு நான் கூறுவதும் இயைபுடைத்தாகும். 1906 ஜுலையில் நீதி மன்றவாதியாய் நான் தொழில் தொடங்கின காலந்தொட்டு, யாண்டுதோறும் கோடை வெயிற் கொடுமைக் கஞ்சி, அதைக் குறைத்தற்கான ஊர்களுக்குக் குடும்பத்துடன் சென்றுவருவதென் வழக்கம். 1909-ஆம் ஆண்டில் கோடை விடுமுறைக் காலத்தை நான் கன்னியாகுமரியிற் கழித்துவந்தேன். அங்கே ஒருதமிழக் கிறிஸ்தவரும், ஆங்கிலம் வடமொழிகள் வல்ல அவருடைய மராட்டிய மனைவியாரும் அவ்வம்மையாரின் சோதரிமாரும் வந்திருந்தனர். அவர்களெல்லாருக்கும் பேச்சளவில் தமிழ்ப் பழக்கமுண்டு. குமரிப்பாக்கம் கலைஞர் வாழுஞ் சிற்றூராகையால், அங்குக் கலைஞர் பலரைக் காணுதலரிது. அதனால் அங்கு வதியவந்திருந்த புதியரும் நாங்களும் நெருங்கிப் பழகநேர்ந்தது. புலனுங்கலையும் பொலியப் பெற்ற அந்நல்லார் சல்லாபத் திடையிடையே தங்கள் மராட்டிய மொழியில் புதியகாவியங்களும் நவீனகங்களும் இலகுவதாயும், தமிழர் தங்கள் பழைய பனுவல்களின் பெருமையையே பாராட்டுவதன்றிப் புதியன புனையாமையொன்றே தமிழ் மொழிக்குப் புதிய புலத்துறைகளிற் புகலும் மிகலும் கூடாமையைச் சொல்லுமெனவுஞ் சுட்டி மெல்லச் சிரித்து எள்ளுவாரானர். அவரோடு வீணே சொற்போர் நிகழ்த்துவதன் பயனின்மை கண்டு, தமிழில் புதுமுறையில் கலையில் நான் புனைந்து வைத்து மாலைதோறும் அவர்களுக்கு ஓர் உரைக் கதையும் பாட்டுடைப் பனுவலொன்றும் படித்துக் காட்டுவதாக ஏற்றுக் கொண்டேன். அதற்காக நாள்தோறும் முற்பகலில் உரைநடையி லொரு

கதையும், 'மாரிவாயில்' எனப் பாட்டுப் பனுவலொன்றும் இயற்றலானேன். சுமார் இரண்டுவார மிப்படிச் செய்ததன் பயனாகக் கதையில் பதினைந்து பகுதியும், பிரபந்தத்தில் அறு பத்தேழு பாக்களும் எழுதப்பெற்றன. இதற்குள் என் விடுமுறைக் கால முடிந்து அப்போது நான் வக்கீல் தொழில் நடத்திவந்த தூத்துக்குடிக்கு மீள நேர்ந்தது.

அதன்பிறகு தொழிற்றுறைப்பணியும் அரசியலியக்கப் பிணியும் என்பொழுதையும் புலனையும் முழுதும் முற்றுரிமை கொண்டதனாலும், குமரியிற்போல தூலியற்றத் தூண்டுவா ராண்டின்மையினாலும், நான் எழுதிய கதையும் பாட்டும் விட்ட நிலையில் பெட்டி புகுந்தன. நாளடைவில் நானவ வற்றை அறவே மறந்தேன். சமீபத்தில் நான் (இங்கு) அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துக்கு வந்தபிறகு பசுமலையில் என் வீட்டைக் காலிசெய்ய எண்ணி என் பெட்டிகளைத் தட்டிப் பார்த்த என் உறவினர், அவற்றுள்ளிருந்த பல காகிதக் கையெழுத்துக் குப்பைகளையும் எடுத்துவைத்திருந்து எனக்குக் காட்டினர். அவற்றிடையிருந்த முற்றுருப் பாட் டுப் பனுவல்களைக் கழித்தொழிக்கக் கருதிப் பொறுக்கிய போது, இப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதியி லென் துணை யாசிரியருளொருவரான வித்துவான், திரு. தி. பொ. பழனி யப்பப் பிள்ளையவர்களை, ஈயக் குச்சியா லெழுதி மங்கியிருந்த என் கதைப் பகுதியை மை கொண்டு பெயர்த்தெழுதி யுதவ வேண்டினேன். மற்றப் பாட்டுக்களை நான் பரிகரிக்கப்போவ தறிந்து தாமவற்றைப் படித்துப் பார்த்துவிட்டு இம் மாரி வாயிலொன்றையாவது நான் முடிக்கவேண்டுமெனத் தூண்டி னர். இருபத்தைந்து ஆண்டுகளாகப் பாட்டு புனைவதைப் பயிலாதொழிந்து நூலாராய்ச்சியே காலப்போக்காகக் கொண்ட நான் இனிப் பாட்டெழுத முயலுவது பலிதமாகா

தெனப் பன்முறை சொல்லிப் பார்த்தேன். என் நண்பர் என்னைவிட்டாரிலர். பழைய அறுபத்தேழு பாட்டுக்களும் நானெழுதியதுண்மையானால் இன்னும் பாட்டெழுதலெனக்குக் கூடுமென்பது தம் துணிவென்று கூறி, இச் செய்யுளைப் பாடி முடிக்குமாறு என்னை இவர் வற்புறுத்தினர். அவரிடையறாத் தூண்டுதலால் சில பாக்களை யாக்கலானேன். இப் புலவரும், என் நண்பர் கரந்தைத் தமிழ்ச் சங்க அமைச்சர், திரு. நீ. கந்தசாமிப் பிள்ளையவர்களும் அப் பாட்டுக்களைக் கேட்குந்தொறும் தமது மகிழ்ச்சி காட்டி என்னை ஊக்கிவந்தனர். இதை யறிந்த புலமையும் புலன்மாண்பு மொருங்கு நிறைந்த பண்டிதமணி திரு. கதிரேசச் செட்டியாரவர்கள் தாம் 25 ஆண்டுகளுக்குமுன் தூத்துக்குடிக்கு வந்தபோது ஒருமுறை இப் பனுவலின் பழைய பாட்டுக்களை நான் படிக்கக் கேட்டுத் தாம் மகிழ்ந்ததுண்டென நினைவுறுத்திப் பிரபந்தத்தை எப்படியும் முடிக்குமாறு என்னை ஊக்கினர்கள். இந்நண்பரின் அன்புரைகள் நாளுந் தூண்ட ஒருவாறாகப் பாக்களைப் பாடி முடித்தேன்.

பிறகு இப்பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதியில், மகாவித்துவான், திரு. ரா. இராகவையங்காரவர்கள், பண்டிதமணி திரு. கதிரேசச் செட்டியாரவர்கள், பண்டித திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் முதலிய பலர் முன்பு இப் பிரபந்தம் நான்கு நாட்களாகத் தொடர்ந்து படிக்கப் பெற்றது. புலவ ரெல்லாரும் கேட்டு அதனை அன்புடன் பாராட்டினர். இராமநாதபுரம் சமஸ்தானத்தில் முதற் பாவலரும், தற்காலம் இவ்வண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சி விரிவுரையாளருமாய் வீற்றிருக்கும் மகாவித்துவான் திரு. ரா. இராகவையங்காரவர்கள், பாட்டுக்களைக் கேட்டுத் தம் மகிழ் வுணர்த்தியதோடு, இயல்பு வளத்துடன் பாடும் திறனிருந்தும் அதை நான் இதுவரை வளர்க்காமல் விட்டது

தவறெனவும் கூறி, அன்புடன் இதற்குச் சிறப்புப் பாயிரச் செய்யுளொன்றும் இயற்றித் தந்துதவினுர்கள். அதன் பிறகு மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழாராயும் வித்துவான் திரு. திருநாராயணையங்கா ரவர்கள் முதலிய பல புலவரும், புலவர் பரம்பரை முகவூர். மு. ரா. அருணுசலக் கவிராயரவர்களும், வெள்ளகால் பண்ணையாரும் புலவர் திலகருமான இராவ் சாஹிப், திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்களும், தனவணிகர் பெருங்குடித் தோன்றல் பாவலர் வயிணுகரம் இராமநாதன் செட்டியாரவர்களும், பிற புலவர் சிலருமிருந்து சிலநாள் தொடர்ந்து இப்பிரபந்தத்தைக் கேட்டு வந்தனர். வித்துவான், திரு. திருநாராயணையங்காரவர்களும், திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்களும், திரு. அருணு சலக் கவிராயரவர்களும் சென்ற இரண்டு மூன்று நூற்றுண்டு களுக்குள் இயற்றப் பெற்ற தமிழ்ப் பிரபந்தங்களுள் இம் 'மாரிவாயில்' பொருள் வளம் சொன்னயங்களில் சிறந்து விளங்குவதாகக் கூறி என்னை உவப்பித்தனர். ஈரிடத்தும் இதைக் கேட்ட புலவர் சிலர் சுட்டிய குறிப்புக்களால் சில விடங்களில் பாக்கள் திருத்தம் பெற்றன.

பிறகு இப்பிரபந்தப் பிரதி மகா மகோபாத்தியாய, டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுக்குத் தபாலில் அனுப் பப்பட்டு, அவர்களாலும் பார்வையிடப் பெற்றது. ஐயரவர்கள் சிறப்புப்பாயிரச் செய்யுளுதவி ஊக்கினுர்கள். அவர்க ளன்பை என்றும் பாராட்டுவேன்.

இதைப் பாடி முடிக்க என்னைத் தூண்டிய வித்வான், திரு. தி. பொ. பழனியப்பப் பிள்ளையவர்கள் அன்புடன் இப்பாட்டுகளுக்குக் குறிப்புரையும் எழுதியுதவின பேரன்பு என்னை எழுமையும் கடப்படுத்தும். மதிப்புரையும் சிறப்புப் பாயிரச் செய்யுட்களுமுதவி இப்பிரபந்தத்தைச் சிறப்பித்த புலவர் எல்லாருக்கும் என் நன்றி யுரித்தாகும்.

இப் பல்கலைக்கழகத் தாபகரும், கொடைமடம் பூண்ட தமிழ் வள்ளலும், வணிகர் பெருங்குடி மரபினருமான ராஜா சர். அண்ணாமலைச் செட்டியாரவர்கள் என்னை இக் கழகத் தொடக்கமுதல் இங்கு வரும்படி வற்புறுத்திவந்து இறுதியி லிழுத்திங்குப் பணிகொண்ட பேரன்பையும், பல்காலும் பலபடியும் தலையளித்து என்னைப் பாராட்டிவரும் அவர் களின் பெருந்தகவையும் நினைந்து, இப் பிரபந்தத்தை அவர் களுக் குரிமையாக்க வெண்ணி அதை அவர்களுக் கறிவித் தேன். அப் பெரியோரும் தாழாதுடனே தன்னிணக்கம் காட்டியதோடு தம் செலவிலேயே இதை அச்சேற்றி வெளிப் படுத்தியு முதவினார்கள். இவ்வள்ளலார் எள்ளருந்தலை யளியை என்றும் நினைந்து பாராட்டுவதன்றி யான் அவர்களுக் குக் கைம்மாறு பிறிது கருதுஞ் சிறுமையை வெறுப்பேன்.

இதை வெளியிடுவதில் எனக்கு எவ்வகைப் பொறுப்பு மின்றி வழுவற வனப்புடன் அச்சேற்றி யுதவிய சென்னைச் சாது அச்சுக்கூடத் தலைவரவர்களுக்கும் நிர்வாகஸ்தர்களுக் கும் நான் என்றும் கடப்பாடுடையேன்.

அண்ணாமலைநகர்<br>9—10—1936

ச. சோமசுந்தர பாரதி.

# மதிப்புரை

ஏறக்குறையப் பத்தாண்டுகளுக்கு முன்னர், உலகத்தில் நாகரிக மிகுந்தபல நாட்டார்களும் ஒருங்கு கூடிச் சிலநாள்கள் தங்க நேர்ந்தகாலத்து, இலக்கியத் துறையில் வல்லுநராய பலரோடும் நான் உரையாட நேர்ந்தது. ஒவ்வொருவரும் அவரவர்கள் நாட்டு இலக்கிய உயர்வினை எனக்கு எடுத்துக் கூறி நம்நாட்டு இலக்கிய உயர்வினை யான் எடுத்துக் கூறக் கேட்டு மகிழ்ந்திருந்தனர். அயல் நாட்டார் பெரும்பாலாரும் நம் நாட்டுப் பண்டைய இலக்கிய உயர்வில் பெருமகிழ்வெய் தினரேனும் அவ்வுயர்வு நீடித்து நிற்றற்கேற்ற பண்பு நம் நாட்டுள் மிக்குஇல்லை என்றும் கருதுவாரானார்கள். ஒருசிலர் உயரிய இலக்கியத்தைத் தோற்றுவிக்கும் ஓர் அரிய உள்ளக் கிடை நம் புலவர்கள்பால் அறவே மாய்ந்துவிட்டதோ என் றும் ஐயுற்றனர். இத்தகைய எண்ணங்களுக் கிடங்கொடுத் தல் நம்முயர்வுக்குத் தகுதியன்றென்றெண்ணி யான் அப்புல வர்களோடு மாறுபட்டு உரையாடிக் கொண்டிருந்தபோது ஐரோப்பாவினின்றும் வந்திருந்த ஓரறிஞர் "உன்பண்டைய பெருமை பெரிதுஞ் சிறப்புடையதே என்பதை யான் ஒப்புக் கொள்கிறேன்; இந் நூற்றாண்டில் காற்பகுதிக்குமேல் கழிந்துவிட்டதே, உன் தமிழில் இந் நூற்றாண்டிலியற்றப் பெற்ற இலக்கியப் பண்புகளமைந்த தொடர் நிலைச்செய் யுட்களோ வேறுவகைச் செய்யுட்களோ உளவாயின் அவற்றை எம்மிடை விளக்கிக் கூறுக" எனக்கேட்டனர். இக் கேள்விக்கு எளிதில் விடையிறுக்க வொண்ணாது சிறிது தாழ்த்தேன். இந்நூற்றாண்டின் இப்பகுதியில் அயல்நாடு களில் தோன்றியுள்ள பலஇலக்கியங்களின் வரலாறுகளையும்

பண்புகளையும் ஒருசிறிது அறிந்திருந்தமையும், நம் நாட்டுள் மேற்குறித்த காலவரையில் எழுந்த இலக்கியங்களை ஒருவாறு அறிந்தமையுமே என்னை விடையிறுக்கத் தடைப்படுத்தன வாகும்.

இக்குறை நம் இலக்கியத்துக்கு மாறவேண்டும் என்ற விருப்பத்துடன் யான் பல புதியபாட்டுக்களைப் பார்த்து வந்தபோது, எனக்குப் பேரன்பரும் தமிழ்ப் பேராசிரியரு மாகிய திரு. பாரதியாரவர்கள் இல்லத்தில், இப்போது வெளி யிடப் பட்டுள்ள மாரிவாயிலின் முற்பகுதியை இன்னிசை யோடு வித்வான் பழனியப்பப் பிள்ளையவர்கள் பாடிக்கொண் டிருக்கக் கேட்டேன். இதன் ஆசிரியர் யார் எனத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற அவாவினல் அப்பகுதி முழுவதும் படித்து அதன் சொல் நிலையையும் பொருள் நிலையையும் கொண்டு ஒன்றும் தெளியாதவனுக நின்றபோது, இதன் ஆசி ரியர் முப்பதாண்டுகளுக்கு முந்திய பாரதியாரவர்களே என் பது கேட்க வியப்பெய்தியும், இறுமாந்தும், ஏமாந்தும் நின் றேன். திரு.பாரதியாரவர்களது அறிவின் மாட்சியைச் சுமார் இருபது ஆண்டுகளாக நன்கு தெரிந்திருந்தும்,அவர்களோடு சில ஆண்டுகளாக இடைவிடாது நெருங்கிப் பழகியும், அவர் களுடைய பாவியற்றும் பண்பை யான் அறிந்துகொள்ளாத அறியாமைக்கு வருந்தினேன். அறிவை ஆராய்ச்சி யொன் றுக்கே உரியதாக்கி எப்பொருளினும் மெய்ப்பொருளே காண முயலுபவர் என்ற பெரும் பெயர் வாய்ந்துள்ளவ ரானமை யால், தம்முள்ளத்தை உயர்ந்தபாக்கள் தோன்றும் பண் பிற்குக் கொள்ளை கொடுக்க மாட்டாரென்று யான்செய்து வைத்த முடிவு தவறு என்பதையும் உணர்ந்தேன். காய்த லுவத்தலகற்றி எப்பொருளினும் எவ்வித ஈடுபாடு மின்றி மெய்ப் பொருளே காணவிழையும் ஆராய்ச்சித் தறுகண்மை யும்,அழுவாரோடழுது மெலிவாரோடு மெலிந்து எப்பொருள்

எங்நிலையிலுள்ளதோ அங்நிலையே தன்னிலையாகக் கலந்து தவமும் கவியுள்ளமும் ஓரிடத்தே காணுதலும் ஒண்ணும் என்பதற்கிலக்காக, உலகத்திலே காணப்படும் பெரியார்களுடைய உயரிய பண்புகள் நமது பாரதியாரவர்களிடம் காணப்படுவது கொண்டு இறுமாப்பெய்தினேன். அவர்கள்பாலுள்ள பாவியற்றும் பண்பு வறிதாகா வண்ணம் மேலும் சில வியற்றி அதனை முடிக்குமாறு யானும் சில அன்பர்களும் வேண்ட, முதலில் அவர்கள் ஒருவாறு மறுத்தனரேனும் பிறகு சில பாக்களையியற்றித்தந்தார்கள். இப்போது ஒரு நூலாக வெளிவந்துள்ள இப்பாட்டு, ஒரு புலவருடைய உள்ளம் முப்பதாண்டுகளுக்கு முன்னிருந்த நிலையையும் முப்பதாண்டுகளுக்குப் பின்னிருந்த நிலையையும் நன்கு தெரிவிப்பதாகும். பாட்டின் பயனைப் பல்வகையாராய்ச்சிகளால் துய்க்க முன்வரும் இக்காலத்து, முப்பதாண்டுகள் இடையிட்டெழுதிய ஒரு நூலின் இருபகுதிகளும் பலவழியிலும் உதவுவனவாகும். முப்பதாண்டுகளாக வளர்கின்ற உள்ள நிலையைத் தெரிக்கும் நூல்களினும், முன்னுக்கும் பின்னுக்கும் முப்பதாண்டுகளிடையிடப்பட்டு எழும் நூல் வேறுவகையானது என்பதும் கருதற்பாலது. ஆசிரியரவர்கள் முகவுரையிற் குறித்திருப்பது கொண்டு இந்நூலெழுந்த காலமும் இடமும் சூழலும் இதுபோன்ற பாடல்கள் எழுதற்குப் பெரிதும் துணைபுரிவன என்பது நன்கு தெரிகின்றது. அவ்வாறே, இப்பாடல்கள் முற்றுப் பெற்ற காலத்தும் ஆசிரியரது முதிர்ந்த அறிவும், உலகியற் பலதுறைகளிலும் சென்ற பயிற்சியும், பலவாறு பகிர்ந்து கொடுத்த பரந்த அன்பும், இந்நூல் முற்றுப் பெறுங்கால் அழகு செய்வன என்பது இவ்வாசிரியரை நன்குணர்ந்த அன்பர்களுக்கு யான் கூற வேண்டுவதில்லை.

பலவகையாக விரிந்த இலக்கியத்துள், இஃது, ஒரு கருத்தையோ ஒருவகை உள்ள நிலையையோ பலவாக விரித்து, கற்பவருள்ளம் பொற்புறுமாறு இயற்றப்பெறும் பகுதியைச் சேர்ந்ததாகும். இதன்கண், தனித்துறையும் ஓவியவுருவின் ஒப்பிலாமகள், தன் அருமைநாயகனை எதிர் பார்த்த வண்ணமாயிருப்பவள், எதிர்பார்த்தது காணாது ஏமாறலும், பின்னர் தேரெனமயங்கிய முகிலிடம் தன் குறைமொழிதலும், அக்குறையாம் நிறையைக் கொண்மூ பார்த்தனிடந் தெரிவித்து அவனுரை கேட்டு மீளலும் இப் பாட்டுகளிற் கூறப்படும் செய்தியாகும்.

பாண்டியன் மகள் பார்த்தனைக் கண்டபோது.

......................................" ஒண்கண்
அளித்தெனைப் பருக அன்னான் அழகமு தருந்தலானேன்"

என்று கூறும் சொற்கள் கற்போருள்ளத்துள் பெரிதும் இன்பம் பயப்பனவாகும். மதங்கொண்ட வேழங்கண் டஞ் சியமகள், தன் நடுக்கந்தீர அம்மதமாவை வென்று தன்னைக் காப்பாற்றிய ஒருவர்க்குத் தன் நன்றி யறிவைத் தெரி வித்துக்கொள்ளப் பார்த்த பளிங்கன்ன பார்வை, அம்மகள் பேரழகில் ஈடுபட்டு நின்று, எவ்வகையானும் அவ ளருள்பெற எண்ணி அதற்கேற்றதோர் வாய்ப்பை யெதிர் பார்த்து, அது வாய்த்த வழி, அதுகொண்டு தன்னுள்ளத்தை யெல்லாம் கண்ணால் வெளிப்படுத்தி நின்ற ஒரு பேரழகானது கண்ணோடு ஒத்துநோக்கலும், ஒருவருள்ளத் தடர்ந்திருந்த பெருங்காதல் அது சிறிதானு மறியாத கண்களிற் சென்று தாக்கி, பேரச்சம், அவ்வச்சத்தினின் றுய்ந்த பெருமகிழ்ச்சி, தான் உய்தற் குதவிசெய்தான்பால் செலுத்திய நன்றி எனு மிவற்றையெல்லாம் ஒருங்கே வெருட்டி, பேரழகும் தண் ணளியுமாகத் தலைசிறந்து நின்றது என்பதை யிவ்வடிகள்

மிகத் தெளிவாக விளக்குகின்றன. "ஒண்கண் என்னைப் பருகிற்று" என்பதும் "யான் அருந்த லானேன்" என்ப தும் உற்றுநோக்கிற் "கண்ணொடு கண்ணிணை நோக்கொக் கின் வாய்ச்சொற்க-ளென்ன பயனுமில" என்பதற் கெழுந்த தெளிவுரையோ வெனவும் கூறலாம். "என்னை அவன் கண் கள் பருகின" என்ற அளவில் நின்றிருப்பாளாயின், பருகிய தால் விளையும் பயனு மின்பமும் பருகிய பார்த்தனே பெற் றான் என்பது திண்ணமாக, இவள் நிலை இன்னதாயிற்று என்பது நன்கு தெரியாது ஐயுறக் கிடக்குமாகலின், "யானும் அவன் அழகை யருந்தலானேன்" எனக் கூறி அவள்பெற்ற இன்பத்தையும் நன்கு தெரிவித்தது மகிழற்பாலது.

"ஒருவரை யொருவர்த முள்ள மீர்த்தலால்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்"

என்ற கம்பராமாயண அடிகளோடு இஃதொப்புநோக்கற் பாலது.

உள்ளத்தின் நிலையை வெளிப்படுத்தும் பலவகையாய செய்யுண் மரபினில், உள்ளநிலைக் கேற்பப் புறத்தே தோன் றும் மெய்ப்பாடுகளையும், செயல்களையும் விரித்துக் கூறி, அம் மெய்ப்பாடுகள் செயல்கள் முதலியவற்றைப் பயிலுமுகத் தானே பயில்வோ ருள்ளத்து எந்த உள்ள நிலையை ஆசிரியர் தோற்றுவிக்க விரும்புகின்றனரோ அந்த உள்ளநிலைதோன்று மாறு செய்வதும் ஒன்றாகும். இந்நெறியில், இங்குள்ள

121"வேர்த்துடல் விதிர்த்து நின்று வெறுங்கைகள் பிசைந்து விம்மி
ஆர்த்தழு தயலா ராயத் தன்பறி வழகு மிக்காள்
பார்த்தன னிறைஞ்சி யண்மிப் பாண்டியர் மகள்கா ணென்ன
ஓர்த்தன னுவந்து யானும் பார்த்திவ னுணர்தி ரென்றான்"

என்ற பாட்டு மிகச் சிறந்ததாகும். வேர்ப்பதும் விதிர்த்து நிற்றலும் உள்ளம் மாறுபட்ட நிலையிலே அறிவின் செய

லொன்று மின்றித் தாமே புறத்தே தோன்றுவனவாக, வெறுங் கைகளைப் பிசைதல் உள்ளத்தோடு அறிவு ஒரு சிறிது ஒன்றுபட்ட வழிநிகழ்தலும், விம்மல் அதற்கடுத்த நிலையில் நிகழ்தலும், ஆர்த்தல், உணர்வு அறிவாலடக்கப் பெறாது மொழிவழி வெளிப்படலும் இயற்கை நெறி ஒரு சிறிதும் பிறழாது ஆசிரியர் முறையாக வைத்துள்ளமை ஆராய்தற் பாலதாகும்.

எந்நாளும், எம் தென்றமிழ் மக்கள், வாழ்தலும் தாழ்தலும், சாதலும் நோதலும், மகிழ்தலுங் கலுழ்தலும் ஆண்டவ னமைத்தவாறே ஆகும் என்னுந் தேற்றமுடையவர்களென்பதும்; கணவனு மனைவியுமாகக் கூடும் வாழ்க்கை ஆண்டவ னருளா லிவர்க்கிவ ரென்ன அமைத்தபடியே ஆகுமென்பதும்; இக்கூட்டம் தெய்வத்தாலே நிகழ்வதொன் றென்னும் தெருட்சி நேர்ந்த மக்கட் பகுதியுள் இல்லற வாழ்க்கை எத்தகைய இடையூறுகளிலும் ஒரு சிறிதும் நடுங்குறாது நடைபெறுவது உண்மை யென்பதும், ஆய உயரிய கொள்கைகளை யெல்லாம் தன்னகத்தே யடக்கிக் கூறுவதே போன்று, தோழி சித்திராங்கதைக் குரைக்கும் பகுதியில் "செம்மை யீதெல்லாந் தெய்வத் திருவுளக் குறிப்பாமென்றாள்" என்னும் அடி தெரிவிக்கின்றது. சோழபாண்டியர் என்னும் இருவரையும் புகழும் பாவலர்கள் பண்டைக் காலத்தும், மத்திய காலத்தும் ஓர் அரசனைப் புகழ்ந்து கூறும்போது குறிப்பாலோ, வெளிப்படையாலோ, உணர்ந்தோ, உணராமலோ மற்றொருவரை யிகழ்த லுண்டென்பது அக்கால அவ்விலக்கியங்களை நுணுகிப் பயின்றோர் பலரும் நன்கு தெரிந்ததாகும். இத்தகைய முறை நன்றோ, அன்றோ, என்பது எம் ஆராய்ச்சி யன்று. இது எவ்விதமாகவோ நூலுட் புகுந்து விடுகின்றது என்பதுமட்டில் இங்கு

"விழுஞாயிறும் எழுதிங்களும் விரவும் பொழுதுற்றேன்" என்னும் அடியைப் படிக்கும்போது நினைவிற்கு வருகின்றது.

மாலைக் காலத்து மதுரைமா நகரில் காணப்பெறும் பல காட்சிகளும் இந்நூலில் நன்கு விளக்கப் பெற்றிருப்பது, இக்காலக் காட்சியைத் தானே நேரிற் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கும் உள்ளத்தில் பண்டைய காட்சியை முதுநூல்களால் கண்ட மகிழ்ச்சியினையும் பிணித்து ஒரு வகையான இயங் கோவியம் இயற்றிக் காண்பிப்பதுபோல் தோன்றுகின்றது. (130 முதல் 133 வரையுள்ள பாடல்களைப் பார்க்க.) செவி லித் தாயர் பலரும் மிகுந்த பரபரப்புடன் கேட்பதாகக் கூறும்,

> "எங்குற்றனை யெங்கண்மணி என்னுற்றது சொல்லென்
> றங்குற்றழு மென்தாயர்சொல் அறியாதுட னழுவேற்
> கிங்குற்றா சிபம்கிற்பதை எய்தாரெவர் வதுவன்
> பங்குற்றதென் என்றேபடர் பரிகின்றனர் பலரும்"

என்றபாடல் இயற்கைக்குப் பெரிதும் ஒத்திருப்பதோடு, பல ஐயங்களா லிடர்ப்படும் உள்ளத்தவர் ஒரு செய்தியைத் தெரிந்துகொள்வதற்கு முயன்று விரைந்து கேட்கும் முறை யினையும் நன்கு விளக்குகிறது. காதலனைப் பிரிந்து அவன் வரவை நெடுநாளாக எதிர்பார்த்து நிற்கும் ஒரு கற்பரசியின் உள்ளத்தின்கண், பண்டு தாம் உடனுறைந்து வாழ்ந்த காலத்தே நிகழ்ந்த பல செய்திகளையும் ஒன்றன்பின்னொன்றாக எண்ணி அவ்வெண்ணத்தினாலே வருந்தி, அவ்வாறு தன்னை வருத்தும் துன்பத்தையே இன்பமாகக்கருதும் எழில்மாண்பு நம் நாட்டிற்கு என்று முரியதாகும். இந்நூலுள்ளும் சித்தி ராங்கதையின் உள்ளம் தன் பழவுறவில் பதிந்து வெளியிடு மொழிகளே மிகச் சிறந்தன வாகும். அப்பகுதியில் சில செய்யுட்கள் அன்புநிலை பெற்ற மக்களுள்ளத்தை அலசி யலசி அலக்கணுறச் செய்யுமென்பதில் ஐயமே யில்லை.

" நல்லார்போல் லாரெனினு மோம்புவதா
ணறமெனத்தா னவின்ரு னென்பால்
வில்லாள்வா னவனுனோர் பொல்லாளு
மல்லளவன் விரும்பி வேட்டோள்
அல்லாக்கச் செய்வர்பிற ரல்லரெனே
யளியாம லவன்வில் லாண்மை
ஒல்லாத பொல்லார்போற் கொடுமைசெய
லொப்புரவோ உரனே என்பாய்"

இப்பாட்டில் 'நானோர் பொல்லாளுமல்லள்' என்ற சொற்கள் சிந்திக்குந் தோறும் கண்ணீர்ததும்பச் செய்வனவாகும். அதனோடு ஒத்துக் கருதத் தக்கது.

" எதுவொன்று மவனேவ நானென்றும்
மனதார எண்ணிற்றிலேன்
மதுவொன்று மலர்வண்டு புதிதுண்ண
நலமீயும் வள்ளன்மைபோல்
விதுவொன்று குடிவீரன் நிறையோடென்
னெழிலார வேளாண்மைசெய்
ததுவொன்றும் நினையாம லாளாம
லளியாம லவனிற்பதே"

என்பதாகும். "சாதலிற் பிழைப்புக் காணத்தகும் வழி" என்ற அடி நம் உள்ளத்திற்கும் அறிவிற்கும் ஊட்டுகின்ற உணவு அளவாலும் சுவையாலும் பலபட நிற்கின்றது.

சித்திராங்கதை, தந்தை யெங்கென வினவும் தன் தனயனுக்கு விடை கூற முன் வருவதும், அவனுள்ளம் அவ்வினு வழிச் செல்லா வண்ணம் பலவகை விளையாடல்களில் அவனைச் செலுத்துவதாகவும் செப்புகின்ற பாடலாகிய,

" தந்தையைக் காட்டக் கேட்குந் தனயனைத் தழுவித் திங்கள்
விந்தையார் வேலை காட்ட விம்முவன்; விளையா டென்னப்

*பந்தைப்பொற் பாண்டில் முத்தப் படகினையெறிவன்; பாலன்*
*சிந்தையாற் சிந்தை நைவாள் நிலையைநீ நினைவை யின்னே "*

என்ற பாடல் எண்ண எண்ண, இல்லற நிலை கொண்டொழு கும் மக்களுள் கல்லொத்த நெஞ்சினரையும் கனிந் துருகச் செய்யாதிராது என்பது திண்ணம். நாட்டின் வளங் கூறுதல், வழியுரைத்தல் முதலிய பல பகுதிகளும் பாராட்டற்குரியனவே யாகும். இந்நூல், அளவால் சிறியதா யிருக்கின்றமையின் எவரும் எளிதாகவே முழுதும் படித்து விடக் கூடுமாகையால், இதன்கணுள்ள பல சிறப்புக்களையும் என்மனந் தோய்ந்தவாறு விரித்தெழுதாது தமிழன்பர்கள் ஒவ்வொருவரையும் தாங்கள் தாங்களே இந்நூலைக் கற்றின் புற வேண்டி யிதனோடு நிறுத்துகின்றேன்.

இருபதாம் நூற்றாண்டின் தமிழிலக்கியத்துள், இந் நூல் ஒரு நல்லிடம் பெற்று நிலைபெற வாழும் என்பது என் துணிவான எண்ணமாகும். பாவின்பத்தை நுகர விழை வார்க்கும், பாநலனைப்பற்றிய ஆராய்ச்சி செய்ய விரும்பு வார்க்கும் இது பெரிதும் பயன்படுவதாகும். தான் மறந்த பெருநிதியை மீண்டும் பெற்றவரொப்ப, முப்பதாண்டுகளுக்கு முன்னர் தான் இயற்றி மறந்த ஒரு நூலை இதுபோது விழித்து முற்றுவித்த, ஆராய்ச்சித்திறனோடு கவித்திறனும் நன்குவாய்க்கப் பெற்ற எனது பேரன்பரும், தமிழ்த்தாயின் தனிமகனும் ஆகிய திருவாளர், ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள், இத்தகைய இன்பம் மலிந்த பாடல்கள் பலவாக வியற்றித் தமிழன்னைக்கு ஏற்றதொண்டு செய்யுமாறு, பாட் டுக்குருகும் பனிமலைவல்லிதன் பங்கன் திருவடிகளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

| | |
|---|---|
| தஞ்சாவூர்<br>9—10—36 | நீ. கந்தசாமி,<br>*கரந்தைத் தமிழ்ச்சங்க அமைச்சர்.* |

# சிறப்புப் பாயிரச் செய்யுட்கள்

மகாமகோபாத்தியாய - பிரம்மஸ்ரீ டாக்டர்

**உ. வே. சாமிநாதையரவர்கள்**

இயற்றியது

நாவலர்கள் புகழ்ந்தேத்த நானிலத்தோர் கொண்டாட
நவையில் கேள்விப்
பாவலர்கள் நவின்மாரி வாயிலெனு மொருநூலைப்
பாடி யீந்தான்
பூவலரண் ணுமலைப்பல் கலைக்கழகத் தமிழ்த்தலைமை
பூண்டோன் யாரும்
மேவலுறு மியற்சோம சுந்தரபா ரதிப்பேர்கொள்
விறலோன் மன்னே.

---

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

**பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியாரவர்கள்**

இயற்றியன

1. நலந்தரு பொருளுண் மிக்க நலத்தது மாரி யென்று
புலந்தர வதுநல் வாயில் போதரச் செழியர் நங்கை
பலந்தர வுய்த்த தாகப் படைத்தெழின் மிக்க வோர்நூல்
குலந்தரு தமிழ்ப்பா வின்பங் குலவுற வியற்றித் தந்தான்.

2. அன்னவன் யாவ னென்னின் ஆங்கிலந் தமிழென் றின்ன
நன்மொழி யிரண்டுங் கண்போ னவையறப் போற்றிக் கற்ருேன்
துன்னுநுண் பொருள்கள் பல்ல துரிசற வேதுக் காட்டி
முன்னுற வியைத்துக் கற்ருேர் வியப்புற வெழுது மொய்ம்பன்.

3. கண்டது மெய்யென் றுள்ளங் கருதுமேற் கலங்கா தியாண்டுங்
கொண்டுரை வழங்க வல்லான் குறைவிலா அன்பா லென்பால்

எண்டக நண்பு பூண்டோன் இயைந்தநற் செயன்மேற் கொண்
மண்டகு புகழான் சோம சுந்தரன் மதிவல் லோனே. [டோன்

4. இன்னநன் னூலை யன்பி னிலச்சினை யென்ன மாரி
யன்னவன் செட்டி நாட்டெம் அரசன் அண்ணுமலைப்பேர்
மன்னிய வள்ளற் கேற்ப மனமகிழ்ந் துரிமை கண்டான்
பொன்னியல் குன்றி னிட்ட விளக்கெனப் பொலிக வீதே.

---

இராமநாதபுரம் சமஸ்தான வித்வானும்,
அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சி விரிவுரையாளரும் ஆகிய
மகாவித்வான் திரு. ரா. இராகவையங்கார் அவர்கள்
இயற்றியது

காமசுந்தரி சித்திராங்கதை காண்டிபன்றரு காதலை
யேமவிண்ணெழி லிக்கிசைத்தினி தேயதூதுயர் நாவலர்
நாமகிழ்ந்துள மின்புறத்தமிழ் நங்கைமெய்க்கணி நல்கினன்
சோமசுந்தர பாரதிப்பெயர் சூடுநன்மதி வாணனே.

---

மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலைத் தலைமையாசிரியரும்
செந்தமிழ்ப் பத்திரிகாசிரியரும் ஆகிய
வித்வான் - திரு. நாராயணையங்கார் அவர்கள்
இயற்றியது

நாமடந்தையின் னலனெலாம் ஒருவழி நணுகும்
பாமடந்தையின் படிமையீ தெனும்படி பகர்ந்தான்
சோமசுந்தர பாரதி முகில்விடு தூது
காமதந்திரங் கடுப்பதென் றுரைப்பதுங் கடையே.

---

வெள்ளகால் பண்ணையாரும், வித்வானும் ஆகிய
இராவ்சாஹிப் திரு. வே. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள்
இயற்றியது

பாரதி முன்னுள் காளிதா சப்பேர் படைத்தொரு மேகசந்தேசம்
வாரம தாக வழங்கினுன்; இந்நாள் மறுபெயர் மருவுத லின்றிச்
சீரிதா இசைத்த திது; பிறர் எவரும் செப்பரி தரிதரி தென்ன
மாரிவா யிலென்ருேர் மேகசந்தேசம் வழங்கினுன் பாரதி மாதோ.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பகுதி விரிவுரையாளர்
பண்டித - திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்
இயற்றியன

1. முக்கோடி புறப்பகையு மறுகோடி யகப்பகையு
முனிந்தொர் நாளிற்
றிக்கோடும் புகழ்படைத்த பற்குனனைச் செந்தமிழி
னியற்கை யாமுள்
ளெக்கோடுங் காதன்மணத் துறுவழுதி மகளந்த
நிகரி லான்பாற்
புக்கோடி வாயில்பகர்ந் தருடருமா கொண்மூவைப்
போக்கு மாறே.

2. சொல்லாரும் வனப்புடனே பொருள்வனப்புஞ் சுவைபலவுந்
துதைந்து கற்றோர்
எல்லாரு முடிதுளக்கும் பவந்தமளித் தனன்றொல்காப்
பியமுன் னுன
பல்லாரு மளப்பரிய நூற்கடல்கள் கடைந்தமுது
பாரோர்க் கீயும்
வல்லாளன் வெல்லுஞ்சொற் சோமசுந் தரனென்னு
மதிமிக் கோனே.

---

காந்தைத் தமிழ்ச்சங்க அமைச்சரும்,
ஆங்கிலம், தமிழ் மொழிகளிற் புலவருமான
திருவாளர் - நீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள்
இயற்றியன

1. பார்த்தனுர் பண்டு பாண்டி மன்னனுர் மகளார் செய்ய
கூர்த்தவே லீர்ப்பக் கோதி லில்லறக் கடமை பூண்டு
பேர்த்தவட் பிரியச் சின்னுள் பேதுறு முளத்த ளாகிக்
கார்த்தனைச் சென்று காண விடுப்பதிம் மாரி வாயில்.

2. தன்னிக ரில்லை யென்னத் தனித்தவி சிருந்த தெய்வக்
கன்னியெந் தமிழ்த்தாய்க் குற்ற கவலைதான் தீர்ப்ப தேபோல்

பன்னெறி யுணர்ந்த சோம சுந்தரப் பெரியான் அன்னை
பொன்னடிக் கணிந்த தேயோ புதுமல ரனைய விந்நூல்.

3. வெள்ளலை யுடைத்து வீழும் வியன்கரைக் கன்னிப் பாங்கர்
உள்ளலை யுடைப்ப வீழ்ந்த வுளத்தளா யொன்றாய் மன்னும்
வள்ளலைத் தோய்ந்த பண்டை வளனெலாம் எண்ணி யேங்கித்
தள்ளலை யென்பா ளோடும் தளர்வுறுங் கற்போ ருள்ளம்.

4. அன்றுதான் மொழிந்த மாற்றம் அருச்சுனன் செவியிற் பட்டும்
பொன்றிலா வுளத்த னாகிப் பொருந்திய தன்மை கண்டும்
துன்றுவார் குழலா ளுற்ற துயருளங் கொண்டும் இன்றும்
நின்றுதான் கண்ணீர் பெய்யும் நீணிலத் தெழிலி யம்மா.

---

மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரும்
சேற்றூர் சமஸ்தான வித்வானுமான, முகவூர்
**திரு. ரா. அருணசலக் கவிராயரவர்கள்**
இயற்றியன

1. பார தியாகியெனப் பன்னுகொடைப் பால்கொண்ட
பாரதி யாகிய பாவலனே—ஈரமே
தோன்றநினை கார்விடு தூதொன்று சொற்றனையால்
ஆன்றநினை யாவர்நிகர் வார்.

2. தென்னிந்தி யாவிற் றிகழ்தமிழ்த் தெய்வவான்
மன்னிந்தி யாம்புகழ்நின் வாய்நூலே—பின்னிந்தி
யாரெல்லாம் மற்றையநூ லார்பொருளைக் காண்பிக்கும்
சீரெல்லா மென்பரிதைத் தேர்ந்து.

---

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தமிழ்ப் பகுதிப் பண்டிதரும்
இந்நூற்குக் குறிப்புரை யாசிரியருமாகிய
வித்வான் - திரு. தி. போ. பழனியப்பப்பிள்ளை யவர்கள்
இயற்றியன

1. தென்னவனார் திருமகளைத் திருவேட்டுப்
பார்த்தன்முனந் தீர்ந்தா னாக
மன்னவனார்க் கவள்தூது விடுத்ததெனப்
பகர்ந்தநன்னூல் மாரி வாயில்
துன்னவனார்க் குறுகாதல் நிலையதுவே
பல்லாற்றாற் றோன்ற வீண்டுச்
சொன்னவனா ரெனிற்கூறு வேன்கேண்மின்;
தமிழகத்துத் துலங்கு சான்றீர்!

2. பண்ணாடு மிசைக்கலையும் பயனாடு
பிறகலையும் பரவி ரண்டு
கண்ணாகுந் தமிழ்க்கலையும் வடகலையும்
வளர்பல்கலைக் கழக மாக
அண்ணாம லைப்பெரிய வள்ளல்நிறு
வுங்கழக மமர்பே ராசான்
எண்ணாரும் புகழ்ச்சோம சுந்தரபா
ரதியென்ன விசைக்கும் பேரான்.

3. வாரிதியா ருலகினிலே யறமுறையின்
வழக்குரைக்கு மன்றி லுற்ற
பேரதிகா ரத்தராத்தி னீதிபதி
பலர்மெச்சப் பிறங்கு சொல்லான்
பாரதியா கத்துடனே நந்தேயத்
தொண்டாற்றும் பண்பி னல்லான்
பாரதியா ரெனப்பல்லோர் புகழுரைக்கத்
திகழ்கின்ற பாவல் லோனே.

4. செழுந்தமிழு மாங்கிலமுஞ் சட்டமுதற்
கலைப்புலமுஞ் சீர்த்த மேலோன்
எழுந்தமிழ்த மழையெனவே சொற்பொழியும்
பெருங்கொண்ட லெம்ம னோர்கள்
அழுந்திமகிழ் கொளநுட்ப வாராய்ச்சி
நூல்பல்ல வாக்கித் தந்தோன்
கொழுந்துமுகிழ் தவச்செல்வன் தமிழ்த்தாய்க்கென்
றியாங்கொள்ளும் குரிசில் தானே.

5. தென்மதுரைத் தமிழ்ச்சங்கத் திறையனூர்
தம்முருப்பேர் தீர்த்திங் குற்றே
தன்மதுரை சோமசுந் தரபார
திப்பெயரைத் தரித்தற் கேற்பத்
தன்மதுரைச் சார்புளதாத் தண்டமிழிற்
புலவருளந் தழைய வென்றே
சொன்மதுர மாகவுரைத் தான்மாரி
வாயிலெனச் சொல்ல லாமே.

6. பண்டுரைத்த நூல்வகையிற் றூதெனும்பேர்ப்
பிரபந்தம் பகரின் முன்னோர்
கொண்டுரைத்த வொருமுறையிற் பல்லோரு
முரைத்தனரக் குறைக்குள் ளாகத்
தொண்டுரைத்த வில்லாதே துணிவுறுக்கப்
புதுமுறையிற் சொற்று னீவிர்
உண்டுரைக்கப் புக்காலிவ் வொருநூலே
பெருநூலா வுலவு மென்பீர்.

7. செந்திறத்த தமிழ்வளமும் தமிழகத்தோர்
தனித்தகவுஞ் சேர வீண்டு
வந்திறுத்த வடமொழியார் வகைமையும்யாம்
மதித்திடற்கு வாய்ப்புண் டாக
முந்துறுத்து நானிலத்தைத் திணைவளமு
மொழிந்திட்ட முறைமை யோர்வீர்
எந்திறத்த தன்றனைத்து மெடுத்தியம்பல்
நூற்கண்ணே யினிதி னுய்வீர்.

அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியில்
முதற் பண்டிதர்

## திரு. E. S. வரதராஜையரவர்கள், பி.ஏ.,

இயற்றியன

1. தண்டமிழ்த் தென்னர் பாவை தன்னலங் கவர்ந்த கன்ற
அண்டர்கோன் சேய்வி லாளி யருச்சுனன் பாற்றன் காதல்
கொண்டலே வாயி லாகக் கொண்டுரை விடுத்த செய்தி
எண்டகு தமிழிற் சேர்த்த வினியநற் கவியின் யாத்தான்.

2. நலந்தரு மிந்நற் காதை நவின்றவன் யாவ னென்னின்
புலந்தரு பொருள்க ளெல்லாம் புகன்றுளி ராங்கி லத்தோ
டுலந்தெழில் கெடுத லில்லா வொண்டமிழ்ப் பனுவ லாய்ந்தோன்
வலந்திகழ் வாக்கா னீதி வழக்கறி நிபுண ஞேன்.

3. பெருங்குடி மரபின் வந்த பெருந்தகை கலைகட் கெல்லா
மருங்கனே கண்ணும் அண்ணு மலையர சருள்க னிந்து
தருங்கலைக் கழகந் தன்னிற் றண்டமிழ்த் தலைமை பூண்டெம்
மருங்கினும் வழங்குஞ் சீரான் வளர்தமிழ்க் குழைக்கு மாண்பன்.

4. வாம மேகலை வண்டமிழ்ப் பைந்தொடி
தாம மார்சுடர் நன்னுதற் சூட்டெனச்
சோம சுந்தர பாரதி சூட்டினன்
ஏம மார்தரு மிம்முகிற் றூதையே.

---

அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தமிழ்ப்பகுதிப் பண்டிதர்

## திரு. அருணுசலம் பிள்ளையவர்கள்

இயற்றியன

1. உள்ளங் குளிர்ந்தேம் உடல்வளர்ந்தேம் ஓங்குவகை
வெள்ளந் திளைத்தேம் விளம்பல்எவன்—வள்ளத்து
நாளா ரமிழ்தமென நன்மாரி வாயிலாற்
கேளா தனபலவுங் கேட்டு.

2. பழமை புதுமை யெனவிரண்டு பண்பும்
செழுமியநூ லாக்கியெமக் கீந்தோன்—விழுமியநற்
றூய தமிழ்த்தலைவன் சோமசுந்த ரப்பெரியோன்
ஆயு மதிவலவ ணும்.

---

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பகுதியில் விரிவுரையாளரும்
இந்நூலாசிரியரின் மாணவருளொருவருமாகிய

**திரு. அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள், B. A. (Hons)**

ஆக்கியது

பொன்னு மணியும் பூணு முத்தும்
இன்பமும் பொருளு முண்மையி லாகா ;
இன்பமும் வீடும் இயையச் செப்பும்
நூலே பொருளென நுவன்ற மேலோர்
வாய்மையை யின்னுங் கண்டா மன்றே.
வாரீர் சோதரீர் மாரி வாயிலைக்
கேளீர் கேட்டுக் களிப்பீர் நீவிரும்
பாண்டிய னிளங்கொடி பாண்டவ ரைவருட்
காண்டீ வனுக்கே செலுத்திய தூதினை.
அஞ்சா நெஞ்சுட னெஞ்சா துண்மையை
யுரைக்கும் வீரன், வாதி, வாக்கி,
உரைப்பருஞ் சங்கக் கவியிற் றிளைத்தே
உரைநயங் காணு முரவோன், பாரதி
சோம சுந்தரன் சொல்லினில் வல்லான்
ராகவன் முதலா யாவரும் போற்ற
அண்ணா மலையார் அமைத்த அவையினில்
அன்புட னளித்த அந்நூ லதனை
இழுமென் மொழியின் விழுமிய துரைத்தலின்,
தேனெலன மொழிகோ ? பாலென மொழிகோ ?
புதுவதிற் புனைந்த யாப்பிற் றாகலின்
விருந்தென மொழிகோ ? மருந்தென மொழிகோ ?
யாதெனப் பகர்கோ ? ஆய்ந்துநீ ருரைமே.

---

மதுரையில் இராமேச்சரம் பாடசாலைத் தமிழ்ப் பண்டிதர்

## வித்வான் திரு. டி. என். அப்பனையங்காரவர்கள்

ஆக்கியது

செந்தமிழ்ப் பாண்டித் திருநாட் டிறைவி
சித்திராங் கதையிணை யொத்திலாக் கற்பினள்,
காரொடு கவினுமெய்ப் போரடு சிலைக்கைப்
பார்த்தன் தன்பா லீர்த்தெழு மன்பாற்
செல்வினைத் தூது சொல்லென விடுத்துப்
பெய்யெனப் பெய்யும் பெருமழைக் கடவுளால்
உய்வழி கண்டாங் குவந்துயிர் தளிர்த்த
சொற்பொருட் செறிவொடு பற்பல வளமார்
கற்பனை மலிந்த விற்பனக் கவிதை
புலவோர்க் கொருபுது நலமா ரமுதென
அண்ணா மலைதரு பண்ணார் பல்கலைக்
கழகம தாங்கட் பழகுசெந் தமிழின்
பேரா சிரியப் பெரும்பதம் சூடும்
ஓரா சிரியன் உயர்குணத் தோன்றல்
சோம சுந்தர நாமன் பாரதி
சொற்றன னதன் றகை சொல்லக்
கற்றவர் கவிநயம் முற்றுணர் வோரே.

---

இந்நூலாசிரியரின் மாணவருளொருவரும்

தமிழ் ஆராய்ச்சி மாணவருமாகிய

## வித்வான் க. வெள்ளைவாரணன் அவர்கள்

இயற்றியன

1. தென்னர்கோப் புதல்வி சித்திராங் கதையாம்
 செய்யவள் குமரியை வழுத்திக்
கன்னிகற் றுறையில் உயர்தவம் நோற்பாள்
 [illegible]லையி லெழுமுகில் தன்னைத்

தன்னருட் டுணைவன் தனஞ்சயன் தேரென்
றுவந்திடத் தோழியன் றென்னத்
தன்மண மதனிற் சிறைவிட மகிழ்ந்த
முகிலெனத் தனியிற்கண் டுரைப்பாள்.

2. எல்லையில் காலம் மன்னுயிர் புரக்கு
மெழிலிநீ என்னெழிற் றுணைவன்
சொல்லிய சூளை மறந்தவன் துவரைச்
சுபத்திரை தோள்கல நயந்தென்
நல்லியல் பழிய வருத்துமிந் நிலைமை
நன்றவற் குரைத்திடென் றவன்றேம்
செல்வழி நுவன்றாங் கனுப்புவாள் தெய்வக்
காதலை விளக்கிடத் தேர்ந்தே.

3. மருதமுன் றுறையு ளெமைக்கொல வந்த
மதஞ்செறி யானையின் முகத்தே
உருவியோ ரம்பு தைத்திட வுய்த்தென்
னுயிரினை யளித்தருள் பார்த்தன்
பருகியன் றென்னைப் பார்த்ததோர் நிலையும்,
பயந்தவர் மகிழ்ந்திட இருவேம்
மருவிய மணத்து மங்கல நிலையும்,
மன்னுயிர் போயினு மறவேன்.

4. என்றுரைத் தன்பார் கட்டுரை பலவு
மியம்பிமற் றவன்றனக் கெழிலார்
தன்றனிப் புதல்வன் றாதையெங் கென்ன
வினவுவோற் கிறையிரு தயர்வாள்
கன்றிய காதற் கவலையுங் கழறி
மீண்டுவந் துரையெனக் காரும்
சென்றுமீண் டுரைத்த செய்திசால் காதை
செந்தமிழ்த் தாயணி கலனே.

5. தாய்மொழி தமிழ்நாட் டரசியல் பண்டைத்
தகுதியும் தமிழர்மேம் பாடும்
சேய்மையா ரிருவர்ச் சேர்த்திடுந் தெய்வக்
காதலும் புலப்படுத் தியாத்த
வாய்மைசேர் மாரி வாயிலாங் கவிதை
வளமிகப் பெற்றுநந் தமிழில்
தூய்மையார் வாயில் மீண்டுவந் துரைத்த
துறையில்முற் றோன்றிய தூதாம்.

6. சீர்திகழ் மாரி வாயிலா மிதனைச்
செந்தமிழ்த் தாய்நுதற் கணிந்தோன்
நேர்மைசே ருண்மை விழைவழக் கறிஞன்
நிறைதமிழ் ஆங்கில முணர்ந்தே
ஆர்வமோ டண்ணா மலைக்கழ கத்தில்
அருந்தமிழ்த் தலைமையேற் றுழைப்போன்
பாரதி புகழ்கொள் சோமசுந் தரன்,நற்
பண்பினன், எம்தமி ழாசான்.

---

இந்நூலாசிரியரின் மாணவரு ளொருவரும் வளவனூரைச் சார்ந்த
வி. பூதூர் மிராசுதாருமாகிய
திரு. கி. வேங்கடசாமி ரெட்டியார்
இயற்றியன

1. பாண்டியன்தன் மெல்லியல்நற் பண்புடையாள்
பாண்டவரிற் பார்த்த னுடும்
ஆண்டகையை நினைந்துருகி யருங்குமரி
தனிற்றவமே யாற்றுங் காலை
காண்டகுமோர் முகில்கண்டு காண்டிவனூர்
இரதமெனக் கருத ஆங்கே
மாண்டகுநற் றோழியினல் மாரியெனத்
தேர்ந்ததனை வாழ்த்தி யன்பாய்.

2. நின்றுயரை நீக்கினன்யான், நீஉலகின்
துயர்நீக்கும் நீர்மை யாய்நீ,
என்றுயரை என்பதிபா லின்றேகி
யினிதுரைத்தே யிரியச் செய்வாய்

துன்றுபுகழ் முகிலரசே யென்றுரைக்க,
வம்முகிலுந் துனைவி னேகி
மன்றல்புகழ் மாலையினுன் பாலணுகி
மீண்டுரைத்த வண்மைக் காதை.

3. கண்டவர்தாங் களிபூப்பக் கவியளித்த
கம்பரிற்பிற் காலத் தந்தோ
எண்டகைய இன்கவிசெய் தீவார்தா
மிக்காலத் தில்லை யென்று
மண்டலஞ்சொல் மாற்றத்தை மாருக்கி
வண்புலவர் மகிழ்ச்சி கொள்ளத்
தண்டமிழுந் தவமணக்கத் தமிழர்வாழ்
வதுமணக்கத் தந்தான் மன்னே.

4. தோன்றிடிலோ புகழோடு தோன்றுகெனுங்
குறட்கிலக்காய்த் தோன்றுந் தோன்றல்
ஆன்றமனத் தறிஞரெலாம் அகங்களிப்ப
ஆழ்பொருளை அறிந்து சொல்வோன்
தேன்றகையு மின்சொல்லா லெம்போல்வார்
சிந்தையிருள் தேய்க்கும் வெய்யோன்
வான்றருநன் னகைவதனன் மலர்மார்பன்
அருள்விழியன் வழங்கு கையான்.

5. யாரெனினு மிஃதுண்மை யெனக்காணி
லஞ்சாம வியம்பு நல்லோன்
ஆரமுதாந் தமிழ்ச்சுவையு மாங்கிலமும்
ஆய்ந்துணர்ந்தோன் ஆண்மை யுள்ளோன்
வாரியமு தெனக்கேட்டார் மனமாந்தும்
வண்மொழியான் மலராள் நீங்காச்
சீரியலும் புகழ்ச்சோம சுந்தரபா
ரதியாகுஞ் செம்மல் தானே.

# உரிமையுரை

புகழ்நற் புலவர்ப் புரந்தமையா தேன்றும்
திகழ்பல் கலைப்புலவர் தேர்கழகம் செய்துமகிழ்
பாரி,கடற் கோள்ளாப் பருவம் வரையாவண்
மாரி,யண் ணுமலைமன் வள்ளல்வரு மார்வலர்க்கு
வாயி லடையாத மாளிகையான் என்மாரி
வாயி லுரிமைகோளல் வாய்ப்பு.

## தமிழ் வணக்கம்

1. தமிழினைப் போற்றுதும், தாய்த்தமிழ் போற்றுதும்,
தாயைச்சேய் பேணல் தலையறம், நம் மெல்லவர்க்குந்
தாய்தமிழே யாமாத லால் ;

2. தென்மொழி போற்றுதும், தீந்தமிழ் போற்றுதும்,
தாயிற் சிறந்தம்மம் தானும்வாழ் நாளெல்லாம்
ஆய்சுவை யோடளித்த லால் ;

3. தொன்மொழி போற்றுதும், சொற்றமிழ் போற்றுதும்,
போனகமாய்த் தாரகமாய்ப் போக்கியமாய் நாமார
வானமுதின் மேலினித்த லால்.

---

## தமிழ்ப் பல்லாண்டு

1. பாடுதுநாம் தமிழணங்கின் பல்புகழும் ; பாடிப்
பரவுதுமே லவளருளப் பட்டுயர்வோ மன்றே ;
ஈடுயர்வில் மொழிக்குழவி என்றும்வள ரிளமை
எழிலினிமைக் கிழவியைநா மேத்தியிறைஞ் சிடுவாம்.

2. நாவலநற் றீவிலுயர் நாயகமா யொளிர்வாள்
நாகரிக முலகில்முதல் நல்கிமகிழ் நங்கை
காவல்பெறுங் கடவுளர்க்குங் கேவல்தரு மிறைவி
கவினனைத்துங் கருவுயிர்த்த காரிகைநங் கன்னி.

3. முதலிலளோர் மூப்புமிலள், மொழிகள்குல முதல்வி,
முன்னமுயிர்க் கிருளிரிய முறுவல்முகிழ்த் தொளிர
உதவியுயர் திணையினருஞ் சுட்டுணர்வி னுரையை
உலகில்விலங் கிடைநரர்க்கு வீற்றுரிமை தந்தாள்.

4. வசையுறுபாழ் வயதிலள், முன் முழுதுலகை யாண்டாள்
வரும்வடசொற் கிடம்வடக்கே வழங்கிமிகி ழுளியாள்
திசைமொழிகள் கருவழியத் தேக்கெறியத் தின்ற
செய்மொழியின் பசிகுறையச் செய்துயர்செந் தமிழாள்

5. மண்ணுலகில் மொழிகள்பல மாண்டிடநாம் காண்போம்,
வளமலிநூல் பலபடைத்தும் வாழ்ந்திலவம் மொழிகள்.
எண்ணரிய வயதுமுதுக் குறைவறத்தால் முதியள்,
எழிலிளமை வளமிறவாக் கன்னிதமிழ்க் கடவுள்.

6. ஞாலமொழி பலவிறக்கத் தானிலவுஞ் செய்யா
நல்லியல்பை யுயிர்நிலையாக் கொண்டதமிழ் நங்கை ;
காலவிடம் தொட்டறியாக் கட்டிளமை காட்டும்
கற்புயர்நற் காதலுயர் மெய்ப்புலவர்க் கருள்வாள்.

7. பொய்ம்மொழியாப்புலமைவளம்வள்ளுவர்போல்வாரும்
போற்றுமறி வறவுரிமை கீரனனை யாரும்
மெய்ம்மொழியா லுயர்த்தபுகழ் மடியில்வளர் தமிழை
மேதினியாள் முதல்மகளாய் மேவுதலோர்வியப்போ ?

8. புலவருளம் புகுந்தவர்நன் னுவில்வளர் நல்லாள்
புதியபல வழகுமணம் பொலியுமலர்ப் பொழில்கள்
பலவிதநற் கனியொடுதீம் பால்மலிபல் லுலகு [பாள்.
பைஞ்ஞிலமார் பண்ணையெனப் படைத்துநிதம் பரிப்

9. தன்னிகரி லாதபழங் கபிலனுயர் கம்பன்
தமிழ்சொலிளங் கோவொடுமுன் வள்ளுவரைத்தந்தாள்
கன்னியழி யாமலருங் கருவில்முதிர் கலைகள்
கற்பமழி யாதகவி யுலகுபல தருவாள்.

10. நல்லதமிழ் நங்கைவளம் நாடுதுநாம் நாடி
நானிலத்து மேன்மொழிகள் நல்குபல நலமும்

எல்லையறு மெழிலிளையாட் கணிந்துமகிழ்ந் தேத்தி
என்றுமிசை வளர்க்குவம்பல் லாண்டுநிதம் பாடி.

---

## தமிழ்த்தாய் வாழ்த்து

### வேறு

தமிழினிய தெய்வதமே மொழிகள்குலத் தனிவிளக்கே
தகவெழில்மெய் சீர்த்த சொல்லின்
அமிழ்துவிழைந் தடுத்தபல புலவரெலாம் அசையலையைக்
கடைந்தபொழு தழகி னோங்கும்
துமியினிடை யெழுந்தொளிருஞ் செல்விஅறி வெனுமலவன்
துணைவியருண் முதல்வி தூய்மை
கமழ்கவிதை உலகுபடை கவிஞருளங் கனிவிக்குங்
காதல்வளர் கன்னி வாழி.

---

## அவையடக்கம்

என்று மிளமை யெழிலார் தமிழணங்கு
நின்றுவளர் நாவலர்தம் நேர்மையினால்—நன்றுணரா
நெஞ்சக் கயவர்தம் நீர்மையினா னுலியற்ற
அஞ்சாமை என்பா லறம்.

# மாரி வாயில்

## நாட்டின் பெருமை

1. வேதம் தமிழ்க்குறள் வீத லிலாப்புகழ்
ஓத ஒளிரெழு ஓதிம முக்கடல்
ஏத மிலாஅரண் என்றும் இழைத்துயர்
போதம் வளர்தமிழ்ப் பூருவ நாஅடு.

2. கங்கை யெனப்பல யாறு கவின்செய
மங்கை வளப்பரு வம்தவி ராதறத்
துங்க மடிவளர் தூயள் தமிழ்கமழ்
சங்கம் வளர்ந்தொளி தங்குதென் னாஅடு.

3. தூரத் துரோமரும் சீனரும் தொல்லுவ
கோரறி நாகரி கத்தின ரொக்கலும்
சாரத் திரவியம் ஐந்துந் தருந்தமிழ்
ஆரத் தொடாரம் அளிக்குந்தென் னாஅடு.

4. ஊரி யூர்காரியொ டோர்தவி சார்ந்தவா
பாரிற் பழங்குலப் பாண்டியர் கோல்சூழுந்
தாரின் றமிழ்ப்புக ழாருந்தென் னித்தில
வாரித் திரைவளர் வண்கும ரித்துறை.

வேறு

5. தென்னவர் புகழுஞ் செந்தமிழ்ப் பரப்பும்
அன்னதென் கடலை யாண்டவர் விறலூர்க்
கன்னிநன் மதில்போற் கற்பமுங் கடலும்
தன்னலம் தொலையாச் சால்புடைக் குமரி.

6. பாண்டியர் பழமைப் பார்த்திவர் குலத்தள்,
பாண்டவர் நடுவன் பார்த்தனன் மனைவி,
ஆண்டகைப் பிரிந்தாள், ஆற்றிலள், பசலை
பூண்டவள் புரிந்து போற்றிய குமரி.

7. வேட்டபின் விடுத்துப் போனவன் உருவம்
தீட்டலு மழுங்குஞ் சிந்தையு முடையள்,
ஊட்டமு மறந்த ஒண்டொடி கொழுநன்
கூட்டமுன் பறிந்த கொன்பழங் குமரி.

வேறு

8. வேட்டவர் வேட்ட வெல்லாம்
விரும்பியாங் குதவுந் தெய்வக்
கோட்டமுன் றுறையுட் டோய்ந்து
கொழுநனைக் கூட்டு மாறு
நீட்டிய தவங்கி டந்து
நிதம்நினைந் துருகு வாண்முன்
சேட்டமுஞ் சுசியும் நீங்கிச்
சிராவணம் சேர்ந்த தம்மா.

9. முக்கடல் கலப்ப மோதி
முழங்கலை தழுவ, வாடை
மிக்குவந் துலவ, விண்தான்
விழுந்தலை படியும் பாங்கர்ப்
புக்கவோர் பிழம்பின் சோதி
பொதிந்தெழும் புனித வானத்
துக்கலூர் தேரென் றோர்கார்
உருவெடுத் தொளிரக் கண்டாள்.

10. பிரிந்தவன் வருந்தே ரென்று
பேதுறும் பேதை நெஞ்சம்
திரிந்தவன் வஞ்ச னென்று
செம்மலைப் பழித்தேன்; அன்னான்
புரந்தரன் பொன்னூர் சென்றென்
புதுமண முரைத்துத் தாதை
திரந்தருந் திருக்கொண் டென்பால்
திரும்புமிந் நாள்கொ லென்பாள்.

11. அந்தணன் அயலான் வேண்ட
அளித்தசொற் றவறு தீன்ற
தந்தையை மலைந்து கானத்
தகனமு முடித்து நின்ற
சுந்தர னெனக்குச் சொன்ன
சூளினை மறந்து வீரர்
சொந்தநல் லறம்பொய்த் தாண்மை
துறக்குமோ தோழி என்பாள்.

12. வந்தனன் வாழி யென்னும் ;
வள்ளலை வழுத்தும் ; காட்சி
தந்தமெய் யுவகை நெஞ்சம்
ததும்பிமேல் வழியச், சொல்லும்
பிந்தவுள் ளுணர்வு முந்த,
மோனமே பெரிது பேசும்
நந்தவி லமுதார் தெய்வ
நகைமுகத் தென்ன நின்றாள்.

13. எழுந்தனள் குதித்தா ளாடி
யிருகரம் புடைத்தா ளோடி
விழுந்துமண் அழுந்து மேனி
மிளிர்ந்தனள் மகிழ்ந்து கண்ணீர்

பொழிந்தனள் ; வரதை யென்று
போற்றினள் குமரித் தேவை ;
அழிந்தனள் நெஞ்சந் தோழி
அம்புதம் தேரன் றென்ன.

14. தேரெனத் திளைத்தாள், தோழி
தேற்றிடத் தெளிந்து சூழ்வாள் ;
காரிணுக் கரசன் மைந்தன்
காதலை மறந்து வீரர்
போரினை விரும்பி வாழும்
போதகக் களிற ணுக்
கோரின முடைய கொண்மூ
வுரைப்பினென் குறைசென் றோதும்.

15. ஓதநீர் சுவறத் தன்வே
லோச்சியோன் தளையா லுற்ற
வாதையென் மனத்தில் நீங்கி
மகிழ்ந்ததை மறவா தெண்ணும்,
பேதையென் நிலையும் பேணிப்
பேசிடப் பெயரும், செல்தன்
நாதனுக் கினிய நம்பி
நலம்பெற நயக்கு மென்பாள்.

16. ஓதிமத் தொதுங்கு வாளிவ்
வொருநிணை வோட வோர்ந்தாள்,
தாதியர் தவிரச் சென்று
தனியொரு புளின மேறி,
ஆதியி லழகற் கண்ட
அன்றுதா னறிந்த வின்பம்
பாதிமே லுளத்துட் கொண்டாள்,
பகர்வள்கொண் மூவைக் கூவி.

17. பார்த்தனென் பதிமுன் னுற்றுப்
படிறறி யாதே னுள்ளம்
ஈர்த்தெனைப் புகழ்ந்தென் னேழை
யிருளையை யிரங்தென் தாதை
வார்த்தைகொண் டென்னை வாழ்த்தி
மணந்தபின் தணந்தான் தன்னை
ஓர்த்தநீ தூதாய் மீள
ஒருப்படுத் துய்க்க வல்லாய்.

**வேறு**

18. ஓதரிய துயர்பலவும் ஒருங்கொருவ
வுவந்துலகுக் குதவுங் கொண்மூ!
காதலிருங் கடல்படிந்து கவலையெனுங்
கருமுதிர்ந்து கனத்தெ னுள்ளம்
ஆதரமென் னளப்பரிய மாதிரமே
னீந்தியெழு மாற்றல் குன்றித்
தீதுறினு முனக்கொருவா றினத்துரிமை
செப்புவதாற் பரிவு செய்யே.

19. விதும்புமனத் தெழுந்தெரியும் விரகவனல்
தரும்பெருமூச் சுருவ மென்னத்
ததும்புவெடிப் பிழம்பினையாற் றணந்தநிலைத்
தணல்தழல்வ தென்னக் காய்ந்த
உதும்பரமென் றழல்காலுஞ் சஞ்சலத்தாற்
சஞ்சலநன் குணர்வை போலும்;
வெதும்புமன வேதனையான் விரித்துரைக்க
வேண்டுகிலே விரைவை விண்ணே.

20. விளித்துனைத்தாம் வேண்டிலர்க்கும் துளித்துவளம்
நல்குவையேல் விரும்பு மென்பால்
களித்துதவா தொருவுவையோ? காரரசே
கைம்மாறு கருதி நில்லாய்;

அளித்துளைய லாதெவரு மளித்திடநீ
பெற்றனையென் றறிய கில்லேன் ;
முளித்தமனந் தளிர்த்திடுமோ றென்குறைநீ
முடிக்கஇனி முடுகு வாயே.

**வேறு**

**21.** என்மேலது பேதைக்குணம், இயல்பேழைமை யன்றோ?
வின்மேவிய படிவத்தொடு விரதத்தையும் விழைவு
தன்மேவிட மின்மேவிறை தனில்விட்டயல் பெயர்வான்
கன்மேவிய நெஞ்சந்தரு வஞ்சங்கரு திலனுல்.

**22.** துறைதோறுறு நலமேவுற மறையோரொடுந் தோன்றித் [யும்
துறையார்தமிழ் மறைசொற்பொருள் தருமெய்ப்பயன் சொரி
துறைசார்ந்துறை யிறையென்னிறை மனமுங்கவர் தொழிலிற்
றுறைபோயொரு துவரைச்சிறு மிக்கென்றெனைத் துறந்தான்.

**23.** இருளைச்சிறு மகளுக்குள நெகிழத்தமி ழேழை
பகுதிப்படு தகுதித்திறம் நியமம்பையுள் படரான்
மிகுதிப்பட வீரஞ்சொலும் வடவாரியர் விரதம்
உகுமெய்ப்புது மடவார்மணத் தெனுமுண்மைமு னுணரேன்.

**24.** ஆசற்றழ கொளிருந்திரு வுடலத்தவ ரகமும்
மாசற்றில ரெனநற்றமிழ் மடவாரறி கிலரால்;
மோசத்திரு ணெஞ்சத்தொடு மொய்ம்பாரியர் வடபால்
வாசத்துற மல்லாலுடன் வளரத்தெரி கிலமே.

**25.** தெரியோமொரு வஞ்சத்துறை சிறிதுஞ்சிறு வயதில்
பிரியேமெனு முரையாடவர் பேசிற்பிழை யார்சூள்
திரியாவுளத் தன்பார்நிலை திகழுந்தமி ழுவர்பால்
உரியேமென உடலோடெம துயிருந்தர வுயர்வேம்.

**26.** எழிலான்நய வஞ்சம்பெரி தெனினென்றமிழ் நெஞ்சம்
கழிகாதல்மு னவனுக்குணர் கருமங்கட வாதால்

அழிவாருமென் வழியிற்பழி யணுகாதவ னுருவம்
விழிவாயென தகமேவிய தகலாதிது சாதம்.

27. இமிழ்வண்டமிழ் கமழ்தெண்டிரை யெங்குந்தரு முத்தம்
உமிழ்மின்னுரு வொடுதண்கரு வுருவம்பெறு கருவி
தமிழ்மன்னுமென் னிலகண்டுள மிளகாயுயிர் தரியா
தமிழ்துண்டவ ரிறைவன்மக னளியானெனி லறிதி.

28. எனவண்முகி லெதிர்வாள்முன மெழில்போலொளி யேர்செய்
மனமெய்யுரை தமிழ்வாணுதல் மதிவண்டிரு மடவோய்!
முனநின்மண முழவத்தளை வீடுற்றனன் முழுதும்
உனதூழிய முயர்பேறெனக் குரைநீயென வுரைப்பாள்.

### வேறு

29. தேடாம லெங்கோ னிருக்குந்
திருக்கோயில் நகர்தேறுமா
றாடாறி வழிசென்று களைமாற
வுண்டாட வுந்தூங்கவும்
வாடாத வளநீர் வழங்காறு
பலபாயும் வரைதோறும்நீ
நீடாம விளையா தவற்காண
நின்றேக வழிசொல்லுவன்.

30. கன்மீது பகைநின்ற தோளண்ணல்
கரைகின்ற கனல்வேதியன்
தன்மீது பரிவுள்ள முடனேந்து
தருநீழ லார்தந்தைவிண்
மன்மீது படைதொட்ட வயமீளி
யுடன்வந்த மறைவல்லவன்
என்மீது பரிவுற்றென் னிகுளைக்
கவன்சொற்ற விவைகேட்பையே.

31. பீடாரு மாரத்து மணநாறு
தென்றற் பிறப்பீவதும்
வாடாத புகழ்வீசு தமிழ்மங்கை
வளர்தொட்டில் வளமார்வதும்
நீடாழி யுழுதோடி நிதிதேடு
நாவாய்கள் நிறைகொற்கையார்
நாடார நலனல்கு பொருநைப்
பெருக்கூட்டு பொதியின்மலை.

32. உலகெங்கு முணராத சாகத்தொ
டகில்வான முறுதண்பொழில்
நலனுண்டு நளிர்நின்று வெயிலென்று
மறியாத நறுநீழலார்
பலவொன்று சிறுமந்தி பலவொன்று
கடுவன் பறித்தோர்பலாப்
பலநீவிர் பொதுவுண்மி னெனவூடு
பொதியிற் பழம்போதிகாண்.

33. இயற்கைத் திறந்தந்த வினைநுட்ப
மலிசெவ்வி யெழில்யாவுமுன்
பெயற்கோ ரிடங்கண்டு பெரிதும்
குவித்தாங் குயர்பெற்றியால்
புயற்காடு மயிலென்ன மயல்தந்து
பொறியைந் தையும்பேதுறச்
செயற்கான நலனூர்தொல் பொதியிற்
பெருஞ்சாரல் தெளிநீர்த்துறை.

34. என்னிற் பிரிந்தான்மன் எழிலாரு
மரமங்கை மார்பண்ணையிற்
பொன்னிக் குறழ்தோளிர் தொடலைக்க
ணெதிர்போழ்து புதிதோர்மணம்

உன்னிக்கொல் முன்வேட உருவத்தை
யுணராத பழிதீருமா
முன்னிக்கொல் முன்சென்று முழுகும்
பழம்பாவ நாசத்துறை.

35. மின்னின்று வாடாப் பசும்போர்வை
வேய்வேழ மிளிர்மத்தகம்
தன்னின்று மொழுகோடை தவழ்கின்ற
தெனவீழ ருவிநீர்கரும்
கன்னிக் கிடந்தந்த வன்கங்கை
கணியாது பெருகுந்திருப்
பொன்னிக்கும் மேன்மல்லல் பொழிசூழல்
குற்றாலப் பொருவில்துறை.

வேறு

36. சாரலெ லாமெழில் தங்கிய துறைபல
சாரவ ளந்தரு தண்டமிழ்ப் பொதியிலில்
சாரக்க ளித்துளந் தண்ணெனத் துளித்தயல்
சாரப் பெயர்குவை தங்கலை யெழிலிநீ.

37. காரிறுத் ததனையும் காதலன் கருதிலன்
பாரெனக் குருகினம் சுட்டிய பறக்கவென்
ஆரியன் மனமென அம்பர மிருண்டிட
நீரினில் மரைகளென் னெஞ்செனக் குவிந்திட.

38. ஆடவர்க் கிரங்குமென் னல்லலுக் கிரங்கிய
பாடல மழுதிடப் பைந்தள விணர்சிரித்
தேடகம் விரித்திட எங்கணு முலவைகள்
பாடவம் கொழித்திடப் பாண்டியிற் படர்குவை.

### வேறு

39. வளமலயம் பிறக்கொழிய எங்கடமிழ் வைகை
களமர்பழங் கிளைஞர்தொழும் செழியர்நிலம் கடல்க
வளமெனமுன் னுண்டபகை வைத்ததனை மருவா
துளவிளையு ணிதிகொழித்தோங் குந்தமிழ்நா டுறுவை.

40. தென்பொதியத் தாரநறுந் தென்றலிருந் ததனுக்
கன்புமற வாதுவிசும் பழவுகுநீ ரென்ன
முன்பெயல்நற் றாவலொடு முந்துவைநீ யூதை
யுன்பருவத் துண்மைதிசை யெங்குமுரைத் துலவ.

41. உறுபயனெல் லாமுருக்கொண் டோங்குபுகழ் நாட்டுத்
தறுகண்மறத் தமிழர்படை தனைமலைவா ரின்றி
மறுவிலறத் தொழிலமரப் பொருநரென வகுத்துச்
சிறுவினைதேர் சாதிதெரி யாதசெழுந் தேசம்.

42. தொழிலுழவென் றிருதுறையும் தொல்லுரிமை சொல்ல
வழிவழியாக் கொண்டதமிழ் வாணர்கட லேறிக்
கழிநிதியம் கருதலர்பாற் கொண்டபெருங் கப்பக்
கிழிகொணர்வார் அறம்வளர்க்கக் கீர்த்திவளர் நாடு.

43. மானுறமும் விழியர்தமிழ் வழியுமண மலர்வாய்
வானுலவு முழுமதியேர் அமுதொழுகு வதனம்
தேனுகராத் தெய்வமரை எனத்திருவும் வாணி
தானுமிருந் திலகவொளி தங்குதமிழ் நாடு.

44. கோட்டமகில் குங்குமந்தக் கோலமொடு கறியா
னுட்டருநெல் விக்கிளநீர் நகர்தருபல் பண்டம்
வேட்டபொரு ளீட்டி, வளை வித்துருமம் முத்தாற்
காட்டவிர்தேன் நாவிவிலை கழறுறுநா டுறுதி.

45. உற்றுயர்கா டுளவினிய கண்பருகி யுவப்பை
மற்றயற்கா விரிதருநற் றலையல்வளம் வழங்கப்

பெற்றதனுல் வளவனெழில் நாடெனும்பேர் பெற்றுக்
கொற்றமுயர் தண்புனனு டுற்றுமகிழ் கொள்வை.

வேறு

46. ஏவாமைத் தொழில்புரிவார் ஏற்பதறி
யாரியற்ற இயைந்து மல்கித்
தாவாமை விளையுளொடு தக்காருந்
தாழ்விலராந் தகையார் செல்வர்
ஓவாமை வளத்தொடுநல் லொளியுதவும்
காவிரிபாய்ந் துயரு நாடு
சாவாமை வண்மைதரும் புகழென்னு
முண்மையினைச் சாற்றும் நாடு.

47. பண்புடையார் பழையர்தமிழ்ப் பாண்டியர்போல்
பாரிலிசை படைத்த சோழர்
தண்புனல்நாட் டவர்தகுதி சாற்றரிது
தலைநின்ற தமிழ மேழி
நண்புடைமை யாடவரும் நனிவிருந்தை
நல்லாரும் நாளும் பேணி
வண்புகழை வளர்த்திறவா வளச்சிறப்பை
வழங்கறமார் வாய்மை நாடு.

48. கள்ளாரு நறுஞ்சோலைத் தண்படப்பை
கழனிபல களமர் சாறு
தள்ளாத வளமனைத்தும் தரும்புனல்நா
டுடைத்தவத்தர் தம்மை யென்றும்
நள்ளாரும் வளவரென நவில்செவ்வி
படைத்தாக்கம் நல்கி யோடும்
வெள்ளாறு பாலாறு விரிபெண்ணைத்
தமிழ்க்காட்சி விழைந்து காண்பை.

49. காவிரிவெள் ளாறுவிரி பாலாறு
பெண்ணையெனக் காம்பு நாலாய்
பூவிரிதண் புனனுட்டைச் சுரந்தூட்டும்
மடியுடைய பொற்பி னல்லான்
பாவிரிசெந் தமிழ்தழுவு நீண்மலயப்
பயனனைத்தும் பம்பும் நாட்டில்
நாவிரிபுள் ளினமிழற்றும் பண்ணுர்ந்து
நில்லாது நடப்பை விண்ணே.

வேறு

50. விரைதிபறந் துறுதிகுடப் பொருநைவளம் விரிக்கும்
தரைதிருவும் தருவுமுயர் வானவர்தந் நாடு
திரைதிமில்கள் வரவழைத்துத் திளைக்குமெழில்நாடு
உரைதிரியா துயர்தமிழ்நாட் டும்பர்மலை நாடு.

51. தமிழ்தவழுந் திருவுயரும் தரணிதொழுந் தரளம்
உமிழ்கடல்சூழ் வழுதிநிலம் உயர்த்தபுலி யோம்ப
இமிழ்மலிசோ ணுடிவையோ டென்றுமுறழ்ந் தெழிலார்
சிமிலநெடு மடிவளரும் சேரர்வள நாடு.

52. நாடுபவர் நாடுவன யாவுநிறை நாடு
கூடுவைமல் குலவுகுட மலைநிதியங் கொழித்துப்
பீடுயரும் பலநதமும் பேணவளம் பெருகிக்
கோடுயரும் யானைதொழில் கூடுமெழில் நாடு.

53. முழுதுலகுந் தொழில்கருதி முடிப்பவர்க்குப் பகலாம்
பொழுதுதவி மாலைசுடர் புகுதுபழம் புணரி
தொழுதுபுகழ் பாடவளந் தூங்குகுடந் துருவிப்
பழுதுணரா மலயநெடுந் தொடர்தொடர்ந்து படர்தி.

வேறு

54. மலையினைக் கடலை மான வரம்பென வகுத்துக் கொங்கர்
அலையினைப் புகுந்து மூவாக் கடம்பெறிந் தாண்ட சீர்த்தி
நிலையினை நிகர்த்துச் செம்மாந் துயர்ந்தயல் நிமிர்ந்துவானத்
தலையினைத் தழுவு மானைத் தடமலைச் சாரல் சார்தி.

55. இத்திரு மலையி னீங்கி னிளநில வெறிக்கு மூரல்
முத்திருந் தலர்ந்த செம்பொன் முளரியின்முகத்தர்வைகல்
மத்திருந் திழுக்கு மாய மகளிர்அங் குழலை மாரி
ஒத்திருந் தொருவா நீல மலையினை யுவந்து காண்பை.

56. நோய்தர அறியாச் சீதம் வளம்செய நுடங்கு மஞ்சு
வேய்தர வசந்த மொன்றே விழைந்தவ ணிலவ வென்று
பாய்தரு மருவித் தாளப் பண்ணொடு மஞ்ஞை யால
ஆய்தர ஞானந் தேடு மழகர சிருக்கும் ஆங்கண்.

57. மாய்தரும்வளமங்கோராமலையினில் இயற்கைத்தெய்வம்
காய்தரும் வெயிலின் வெம்மை கண்டறி யாத கானில்
வேய்தரும் குழற்கா லூத மென்சிறை மிழற்ற வெற்பிற்
சேய்தருங் கலுழி பாடச் சிறந்தர சிருக்கு மம்மா !

வேறு

58. கொடுமனத்த ரிருளுளத்தை யளந்தாழுங்
குடகடல்சூழ் குடகின் பாங்கர்
நடுமனத்தர் நேர்மைநெறிச் சால்புயர்வு
நனிகாட்ட நிற்கும் நல்ல
நெடுமலையத் திடைச்சிமய நிவந்துமழை
நிலைநீல மலையின் வானைத்
தொடுமரிய தடஞ்சாரல் தங்கியிளைப்
பாறிவழித் தொடர்வாய் செல்லே !

### வேறு

59. நாடுகுட நாகமகல் நாகமளந் துயரும்
கோடுகுணக் கோடுவரை யோடுமுறை கொண்டு
கூடுகுதூ கலமதனின் கூலமெனத் தாலம்
பாடுகுல நீலமலை பம்புமயல் படர்தி.

60. மாய்தலறி யாதபசு மாமைமலை மருமந்
தோய்தலறி யாதுதவழ்ந் தொழுகுபழ வானி
தேய்தலறி யாதசெழுஞ் செவ்விசெயத் தினமும்
சாய்தலறி யாதவளத் தண்ணடைகள் சார்தி.

61. என்னெழிலுங் கன்னிமையு மேதமறி யாத
மின்னிடையார் பலர்நலமும் வெளவிமகிழ் மீளி
மன்னுபொது மார்பமென யாவையுமேல் வாரித்
துன்னுமிரு பெண்ணைவளந் தோயஉயர் நாடு.

62. சேருதிநன் ஞடதனைத் தினம்விளையா டிளையார்
சாரையினுக் கோடவவர் சீரொலிக்கே தடம்வாழ்
சாரசமோர் சிறிதும்வெரு வாதருகே சகுலி
ஊருவவோர்ந் துவக்குமெழி லொன்றுமொளி நாடு.

63. முட்டியறி யாதவளம் முரலிசைப்புள் மகிழ
மட்டிலடங் காதமது வூட்டுமெழில் வனமும்
கொட்டியென ஆம்பலென நெய்தலெனக் குரகம்
ஓட்டியொரு வாதுலவும் ஊருணியும் துதையும்.

64. நாடிதுவிட் டடைவைநறு நாறுதொறும் நத்துக்
கூடிரியக் களமர்கடைக் குலமடவார் கெழுமி
ஓடிநடத் தழுவியவர் உழுவல்பெறு முழவர்
நாடிமகிழ் விழவயரும் தொண்டைநல நாடு.

### வேறு

65. தொண்டையி னெல்லை யெய்தத்
தூயநல் லமுதை வென்ற
பண்டைநற் றமிழிற் பண்ணார்
பாசுரம் பயில்வ தோடும்
அண்டையிற் சாமம் பாட
அழகனா யமர்ந்தான் செய்ய
இண்டைநல் விழியன் நின்ற
எழுமலை நிவந்து தோன்றும்.

66. வடுகினில் முரலும் வண்டும்
தமிழ்தருங் குயிலும் வந்து
நெடுமலைச் சாரல் தோறு
நித்தமு மிசைப்பக் கேட்டுக்
கொடுநுதிக் கொவ்வைச் செவ்வாய்க்
கிஞ்சுகங் கொஞ்சும் கோல
அடுசுவைப் பாலி னின்சொ
லரம்பையர் விரும்ப வம்மா.

67. ஓதிய பண்க ளோடு முவகையி
லாழ்வார் பற்பல்
சாதியர் துழனி யாரத்
ததைதிருப் பதியைச் சார
ஆதியில் முருகன் கோயில்
அவன்திரு மாமன் வைப்பாய்ப்
போதிய புனைந்த போதிப்
பொழில்வலங் கொண்டு போதி.

68. அம்மலை யகலம் நீங்கி
யருஞ்சுரத், தத்தம் நீந்திப்
பம்மலுற் றோடும் ஆறும்
பலகுல மலையும் பாங்கர்ப்

பொம்மலுற் றகன்ற நாடும்
புளிஞரா றலைக்குங் காடும்
மம்மர்செய் அளக்கர் தாண்டி
மாரகத மலையைக் காண்பை.

**வேறு**

69. மகிழமுங் கடம்பும் மலிதருஞ் சாரற்
கிடையிடைப் பசுநிறப் பளிங்கின்
முகிழெனக் குரும்பை முதிர்ந்திள நீரும்
வழுக்கையு முதவிட முசுக்கள்
மகிழ்ந்துனை விருந்துக் கழைக்குமா றெழுந்து
வாங்கிய வளமட விருந்து
நெகிழ்ந்திள மகவுக் கருத்திட நிறைந்த
தென்பொழில் மாரகதம் நீங்கி.

70. மேலலைப் பரதர் மெல்லியர் நிதமும்
நித்திலம் வித்துரு மமுமே
சாலவுங் கொணர்ந்து தந்தமுந் தேனுந்
தருபவை தமக்கவை பகரும்
ஏலமார் வரையிற் சந்தன நிழலி
லென்றுமங் கிருந்தரம் பையர்கண்
ஞாலமா ரழலூ டருந்தவ முழந்த
அறிவர்கல் லருந்ததி யடைவை.

**வேறு**

71. பழமுதிருஞ் சோலைவளம் பம்புமருந் ததிவிட்
டழல்முதிரும் வெயிலுழையா வடர்வனமார் சூழல்
நிழன்முதிரும் பொழில்தழைய நின்றபழம் பம்பைப்
புழன்முதிரும் பணைசெறிதிண் புலப்பரப்பிற் புகுவை.

72. ஆறுமழை நீருதவா அவல்களெலா
மற்ருெழிய அவ்வா றன்றி
யாறுபிழை யாதொழுக யாணர்புன
லனவரத மளிக்கும் பம்பைப்
பேறுபிழை யாதபெரு வீறுதவு
பொய்கைவளம் பெருக்கிப் பேணச்
சாறுபிழை யாதபுலம் தங்காமற்
சாருதிதென் கங்கை யாற்றை.

73. ஏராரும் பொழில்பலவும் படப்பையொடு
விளையுள்வள மெல்லா மீயும்
சீராருந் தெண்ணறல்தீங் திரைவிரிகோ
தாவிரிதான் சென்று மேற்கே
பாராரு மலையழகு பார்க்கவரும்
பவ்வமெனப் பரந்து பாக்கம்
ஊராரு மருதமொடு பாடிபல
வுவந்துலவி யொழுகும் மாதோ.

74. தான்மருவு தென்கன்னித் தரைமருமம்
தழுவுகடற் றடக்கை போல
வான்மருவு மலயநில மகளையலே
மகிபன்மண மகிழ வார்க்கும்
தேன்மருவு தெண்ணீரி ஞெழுக்கென்னத்
தெய்வவளஞ் செய்து செல்லும்
மான்மருவு மடவிழியார் நிதங்குடைகோ
தாவிரியின் வனப்பைக் காண்பை.

75. என்றுமுள தென்றமிழ்போற் பரம்பொருள்போ
லெல்லையறு கால மெல்லாம்
நின்றுவள நிலமூட்டுந் தொல்கங்கை
யெனவடவர் நினைத்து வாழ்த்தும்

தொன்றுவளர் தூயபுக ழெனநீடண்
ணீத்தமதைத் தொழுது நீங்கிச்
சென்றுவளஞ் செங்குடக்காய்க் கொழித்தொழுகு
நருமதையின் தீரம் சேர்தி.

76. தோமுற்றார் தொடுகடலை வெறுத்துரிய
தொன்றுமுதிர் பவ்வந் தோயக்
காமுற்றார் குடக்கோடும் நருமதையின்
கரைமருங்கிற் கவினார் கானம்
பேமுற்றார்க் கவலமுமுள் பிழைப்பிலறப்
பெருமிதத்தின் பெற்றி பேணி
ஏமுற்றார்க் கெழில்வளத்தா வின்புமிழைத்
தியலமைதி எங்கும் எய்தும்.

77. மடமானைத் தொடருழுவை படப்பாயும்
வயமாவின் காலை வாலால்
திடமாக வரிந்திறுக்கி வீழ்த்தியதைத்
தின்றுதிரி மூரிப் பாந்தள்
நடமாடு கொடுவனத்தின் நடுநெளியும்
நருமதையாம் நதத்தீ ரத்தின்
தடமாருந் தவப்பள்ளி மிடையவிடை
யரமகளிர் சாழ லார்வர்.

## வேறு

78. இலங்குமிவ் வளாகம் நிற்க
வியங்குதி வடபா லாங்கே
கலங்குபு கயிறாய் முன்பாற்
கடல்கடைந் தயர்வாற் றூங்கித்
துலங்குவான் கங்கைக் கோட்டந்
தொல்கங்கைப் பொழிலி னீங்க
விலங்குமா சுணம்போ னீண்ட
விந்திய மலைவந் தோங்கும்.

வேறு

79. நிலத்தியலு மொழிவழக்கும் நெறிபலவுங்
கலையுணர்வு நீண்ட நாளாய்க்
குலத்தியலுந் தொழிலறமுங் கொள்கைகளும்
வெவ்வேருக் குலவக் கொண்டு
நலத்தியலு மறத்தொல்லை நாகரிக
மிரண்டுமிந்த நல்ல நாட்டில்
கலத்தியலு நீரென்னக் கலவாமற்
காக்குமிடை விந்தங் காண்பை.

80. தன்காதற் றென்புலத்தைத் தழுவுமிரு
கரமென்னத் தக்க வாறு
மின்காதல் புரிமஞ்சு தவழுமிரு
மலைத்தொடரு மிண்டிக் கன்னி
நன்காதற் றுறையிறைஞ்சிக் கூப்பவிடை
வளம்வளரும் நாடு காத்துப்
பொன்காதல் புரிவிந்தம் குடகுணக்காய்
நிலப்பரப்பைப் புரந்து நிற்கும்.

81. விந்தமலை விடுத்துவடக் கேகுமிடை
விரிந்துபடர் வியலின் வெம்மை
யந்தரத்து மழற்றுமதன் அகனீந்திக்
கடப்பதுமிக் கருமை யாமால்,
உந்தரத்து நீயணுகில் உன்னீர்மை
யுண்டுதவு முனக்கங் கெவ்வம்
கந்தரம்நீ யாகையினல் உயர்ந்தோங்கிப்
பறந்ததனைக் கடப்பை காரே.

வேறு

82. நீடுநிலை கோடைபெற நிழலொடுநீர் நில்லாக்
காடுமுளி யோமைநணுக் கவடுதொறுங் காணக்

கூடுவன குடிஞையொடு கூன்சிலவு மல்லால்
ஊடுலவு முயிரினமாண் டொன்றுவன காணாய்.

83. நிழலுமிழும் உலவைபசு நிறப்புதல்புல் லெதுவும்
அழலுமிழும் வெயில்தெறவாண் டறவொழியு மடவி
தழலுமிழத் தறுகணர்தாம் தாக்கெறியுங் காழ்கள்
சுழலுமிழுஞ் சூறையிடைச் சூறைகொளுஞ் சூழல்.

84. பிணவுபுனிற் றுழுவைவிடர்ப் பிறங்கவதன் போத்தாங்
குணவுபெறற் குழல்வதைமுண் முளரிகிழித் தோச்ச,
நுணவுலவை யெருவைபுலி யெருவைமுடி நுங்க
வணவுழியாண் டழல்புலியை யறைந்தடர்க்கு மடவி.

85. மாந்துபுன லோடுணவும் வழங்கரிய வரைப்பில்
ஈந்துபுதற் கள்ளிமிசை யீகைபடர்ந் திவரும்;
மாந்தரிலை விலங்கினமும் வாழ்வரிது வழியில்
நீந்தரிய நெடியவனம் நீங்குவைநீ பறந்தே.

86. இவ்விடம்விட் டேகிவட மதுரைவல மிட்டு
வெவ்விடமுண் டவன்சடைநீர் வேணியொடு விளவச்
செவ்விடமோர்ந் திரியமுனை தெரியுமதிற் றிளைத்தே
எவ்விடரு மியவயர்வும் இறக்குளித்தாங் கெழுவை.

87. தென்மொழிபோற் றென்றமிழ ருரனுளம்போற் றெளிந்து
தொன்மொழியார் யமுனையறல் தோயுமிரு துறையும்
பன்மொழியும் பயில்வர்குடை பயசினிடைப் படிந்தே
என்மொழியென் கொண்கனிடம் இயம்பவிரைந் தெழுதி

88. யாணர்திரை கரைபொருமால் யமுனைமதில் கழுவும்
பாணர்புகழ் செல்வம்வளர் பஞ்சவர்நற் பதிபல்
வீணர்நுழை யாதவினை யாற்றுபவர் வேள்வி
ஆணர்மலி யிந்திரப்பி ரத்தபுர மடைதி.

89. பேரரசர் ஆதரமும் பேரறிவும் விறலும்
வீரமுந்தா ளாண்மைவிளே விழுநிதியும் இறைமை
வாரமும்நேர் சமைத்ததிரு வைப்பெனவாங் கோங்கு
மூரதனை யொன்றிநதி யோரம்விரி சேரி.

90. ஓரையயர் வோருமய லுறுதவநோற் பவரும்
சீரையணி வோருமுயர் சீலதரிப் பவரும்
ஆரையக முடையவளேங் தகன்றபுறஞ் சேரிக்
கூரையயல் குலவுபெருங் கோயில்களில் வதிவர்.

91. இரவுபக விடையறவற் றெப்பொருளு மேந்தி
விரவுபுறம் வினைபுரிவோர் படைபயில்வார் வேகப்
புரவிகளி றூர்வர்நிறை புனல்படிவார் பொம்மல்
அரவமொழி யாநியமம் அகநகர்வாய்க் கொளுவும்.

வேறு

92. நன்றெங்கு மிசையேறி நடுநாவல்
வடபாதி எழில்நா டெலாம்
நின்றங்கு தம்மாணை பொதுவற்று
நிலையத்தங் நேரா ரும்நேர்
மன்றங்கு வந்தேறி வழிகூறி
வந்திக்க மன்சூயம் வேட்
டன்றங்கு பொன்ரூத புகழ்கண்ட
வடலைவர் அரசாளு மூர்.

93. நீடாமல் நகரும்பர் வலமாக
விண்சாரி நீநேர் வையேல்
தேடாம லடலைவர் திறல்பேசு
திருவைப்பி னெழில்கா ணுவை

கூடாம லஞ்சாத குலமன்னர்
நிலவாழ்வு கொல்வில் வினர்ப்
பாடாமல் மகிழ்கின்ற பாவாணர்
பாண்மக்கள் பாரில் லையால்.

வேறு

94. மண்ணொடு பிறந்து தூய
மன்குடி சிறக்கத் தோன்றிப்
பண்ணொடு வளருந் தெய்வப்
பழந்தமி ழரசி யெங்கள்
பெண்ணொடும் பாதி யான
பெற்றியன் பிறவான் மூன்று
கண்ணொடும் பத்தர் பாவங்
காணொணுப் பெரியோற் கன்பர்.

95. ஐவரும் புதிய பேரூர்
அமைத்தத னடுவில் தங்கள்
தெய்வதந் தமிழர் போற்றும்
சிவன்திருக் கோயி லுட்டி
மெய்வழி பாடு காட்டி
விழைபவர் தொழப்பல் வேறு
மொய்வரு நியம மெல்லா
முறைவகுத் துரிமை செய்தார்.

96. நித்தனின் நியமம் நிற்க
நெடுந்தடந் தெருக்கள் சுற்றிப்
பத்தியி னெழுவ நான்கு
பக்கமுங் கோட்டிப் பாட்டை
பித்தியின் புழைகள் கூடும்
பீடிகை மன்றம் பள்ளி
சத்திரம் தடாகம் தோப்பு
தண்டமா திகமுஞ் சாரும்.

97. நன்னகர் நாப்பண் நம்பன்
பொன்தளி நணுகி ஐவர்
மன்னர்பொன் முகடா ரைந்து
மாளிகை சிகரி மன்னி
பொன்னகர்க் குறவு காட்டிப்
பொருவரு பதாகை நீட்டி
உன்னரு முயர்வி யாரு
முணருமா ரெளிர்ந்து தோற்றும்.

98. நலத்தகு தம்பி மார்கள்
நால்வருள் முதல்வன் மூன்றுன்
வலத்தினில் வைக எங்கள்
வள்ளலோ டிளவல் வாம
நிலத்தினின் றேமஞ் செய்ய
நேயத்தால் நிறுவி என்றும்
அலத்தல்விட் டாழி யோச்சும்
அண்ணல்த னரசு வீறும்.

99. பொன்னவிர் மாட மைந்திற்
பொருவிலா நம்பி முன்னினன்
கன்னிமை கவர்ந்து காதற்
கவலைதந் தகன்ற காளை
நன்னகர் அண்ணல் கோயில்
நடுவதன் வாம நிற்கும்
முன்னிழல் படங்கில் மூரி
வானரம் நடங்கு முன்றில்.

100. நாவியு முயலு நாறு
நவ்வியு முகளு ஞாங்கர்
வாவியும் வனமு மெல்லா
வனப்புடை மணப்பூ நல்கும்

காவிய முருக்கொண் டென்னக்
கவினுமக் கோயி லும்பர்
ஓவியம் நடைகற் றென்னச்
சிலதிய ருலவக் காண்பை.

101. நின்றனை நினைந்து சூழ்தி
நெடுநிலை மாடத் தும்பர்
மன்றுபற் பலவுள் வாம
வாசியார் பளிக்குத் தெற்றிப்
பொன்றிணி யமுனை யாற்றின்
பொலிவொடு கொட்புக் காணக்
குன்றணி குயிற்றி யாங்குக்
குலவுபொன் பொருவில் கூடம்.

102. வேல்பயில் வீரர் நின்று
வியந்திடச் சூத ரேத்த
நூல்பயில் புலவர் வாழ்த்த
நுவலரு மாடத் தும்பர்
பால்பயில் மொழியா ரந்திப்
பல்விளக் கெடுத்துப் பம்பிச்
சேல்பயில் விழிக ளாரச்
சூழ்தரச் செம்மல் சேரும்.

103. யவனர்நற் சிலையின் மேனி
யாணரோ வியம்போல் வண்ணம்
நவநனி யெழில்கள் நல்கும்
நளினவாண் முகத்தி லொத்த
உவமனில் விழியான் யாரு
முணர்ந்துட னிறைஞ்சு மெங்கள்
சிவனருள் திருந்தப் பெற்ற
செம்மலை யெளிதிற் றேர்தி.

104\. ஆரமும் நூலும் பெண்டி
ரயில்விழிச் சுவடும் பொன்னூர்
பாரமும் தாங்கு மார்பும்
படைபயில் நெடிய தோளும்
வீரமும் கொடையும் வெஃகும் ;
விழியளி யொளியை விள்ளும்;
ஈரமும் அறிவோ டாண்மை
யெழில்முகத் திலகு மென்றும்.

105\. சோலையிற் றுழனி யோயத்
தோயிருட் படலம் சூழும் ;
பாலையில் வண்டு பாடப்
பாங்கர்மின் மினிக ணீந்தும் ;
மூலையில் யமுனை நீரில்
முகிழ்நிலாக் கற்றை மூசும் ;
மாலையி னெழிலை மாந்தி
மகிழ்வனம் மாடத் தென்றும்.

106\. அடுத்தர மியமாம்; சூழு
மயலெழிற் பொழிலில் யாழின்
எடுத்துளர் நரம்பிற் றும்பி
எங்கணு முரலும் ; தீம்பண்
மடுத்தவ ணிருந்து வள்ளல்
மாலையிற் றனிக்கு மாங்கண்
கடுத்தவ னகலா வாறு
கடுகியென் கவலை சொல்வாய்.

107\. ஈண்டியங் கெழிலி ! ஏந்த
விளமரக் காவின் எங்கும்
வேண்டிய வுருவு காட்டி
மிளிர்ந்தவன் விழிநிற் காணத்

தூண்டிய பின்ன ஞற்குன்
உருமுரை கரந்து தொல்லைப்
பாண்டியர் தமிழிற் பன்ஞய்
பாங்கிஞ ருணரா வண்ணம்.

108. விண்ணிலே மறைந்து நோக்கி
வேந்தரிங் கிதங்கண் டொன்ஞர்
புண்ணிலே பொலியும் வாளாள்
புரவலற் ஜெழுது தென்னர்
மண்ணிலே மனையாள் நல்லூழ்
வாய்த்திலா மங்கை கொண்கன்
கண்ணிலே கருணை காணுள்
கடவுள் வழிபா டென்பாய்.

109. ஏழையா ளிரங்கா யேனும்
எழிலட லுடையாய்க் கென்றும்
பீழையார் பேதை பெண்மைப்
பெட்புடை வாழ்த்தும் பெண்டிர்
மாழையார் வள்ளல் நின்னில்
வாழூழ் மடந்தை மார்க்குப்
பேழையா ரன்பு முய்த்தாள்
பெறுகென வணங்கிப் பேசாய்.

110. நீலமார் வானின் மீன்போ
னின்றவண் மிளிர்ந்து மின்னிச்
சூலமார் கடவுட் கன்ப
னடிதொழு தவற்கென் பெண்மைச்
சீலமார் துனியும் செம்மல்
சேவகக் கடனுஞ் செப்பிக்
கோலமா ராண்மைக் கேலாக்
கொடுமையை விடுக்கக் கூறுய்.

111. யாரைநீ யாதுன் மாற்றம்
எனிலவற் கியம்பு கண்டாய்
ஓரையைக் கழங்கைப் பந்தை
ஒப்பில்தன் பாவை தோழி
மாரைமுன் கவலை யில்லா
மனத்தையும் விடுத்துன் காதற்
பேரையே பேறென் றெண்ணிப்
பேதுறும் பேதை தூதேன்.

112. விந்தைநீ வினவல் என்பேர்
விளைவொடு கருவி யென்ப
முந்தைநான் அறிவ னுன்னை
மும்முறை முகம னில்லை
நுந்தையின் அணுக்கத் தொண்டன்
நுவல்வனுன் புகழ்மை பேணி
நிந்தையை நீக்க நின்பால்
நேசத்தால் பேச வந்தேன்.

113. தென்னர்செந் தமிழர் தேயாச்
சீர்த்தியர் செழியர் தெய்வ
நன்னர்வான் கங்கை மண்ணை
நணுகுமுன் பழையர் நாட்டை
மன்னராய் ஆண்டு மாண்ட
வழுதியர் வழியில் வந்தாள்
பின்னர்நின் மகனைப் பெற்றாள்
பெருமனைக் கிழமை பேணாய்.

114. கற்பற வாழ்வுங் காதற்
கடற்கரை விளக்குங் காணத்
தற்பரை யருளை நாடித்
தமிழ்த்துறைக் குமரி நோற்பாள்

விற்பன விநய மாதர்
விரகிலள் விழைந்து நாளும்
கற்பன கணவன் காதற்
கடன்புரி கடன்காண் கல்வி.

115. என்றிவை யியம்பி யின்னும்
எம்மிடைத் தொடர்ந்த காதல்
நன்றுமுன் வளர்ந்த செய்தி
நான்சொல வுணர்ந்தென் கொண்கன்
பொன்றலில் புகழ்போல் நின்ற
பொருவிலென் அன்பன் றற்குச்
சென்றுநீ தெளியச் செப்பித்
தேற்றியெம் மிருவர்ச் சேர்த்தி.

116. வருபுனல் விழவு காண
மருதமுன் றுறையுள் மேனாள்
ஒருபுறக் காவி லுற்றேம்
உருத்தவ னும்ப லொன்று
மருவுழி வெருவித் தோழி
மாரொடு மறுகப் பன்னத்
துருவியம் பும்பற் கொம்பி
னூடுறைத் தூன்றக் கண்டேன்.

117. தெளித்தெதிர் சினந்த யானை
தெருமர முகத்தில் வாளி
குளித்தவன் புழைக்கை வில்விற்
குழித்துமேற் குதிக்க வோடி
ஒளித்தது பிளிறி ; ஊங்கோர்
ஆளிபோல் மீளி ஒண்கண்
அளித்தெனைப் பருக அன்னா
னழகமு தருந்த லானேன்.

118. காத்தெனை யளித்த காளை
கண்களி யூட்டக் காதல்
நீத்தம்நா னிலையேன் நாணென்
நிறையுட னெகிழ நெஞ்சம்
யாத்தவற் குறவு கூற
யாணர்நோய் மகிழ்ந்தேன் ; கண்டான்
பூத்தபுன் முறுவ லுள்ளப்
புணர்வொடு புளகம் கூர.

119. பஞ்சவர் கால மோராப்
பழையர்தங் குடியிற் றோன்றும்
வஞ்சியர் தமிழர் கற்பின்
மணம்புணர் வகையா னன்றி
எஞ்சிய குலத்தார் காதற்
கிடைந்துள மிளகார் ; என்பெண்
நெஞ்சமிம் மாணிப் பார்ப்பான்
நெகிழ்த்தவா நினைந்தேன் மாழ்கி.

120. என்னிலை யயிர்த்துள் ளேங்கி
எண்ணமிட் டயரு மேந்தல்
தன்னிலை கருதிக் காதற்
றருக்கொடு தகவார் தந்தை
மன்னிலை மாண்பு முன்னி
மறுகுமென் னுள்ளம் பொய்யா
நன்னிலை நட்பி னல்லார்
நாப்பணூர் நகையை நாணும்.

121. வேர்த்துடல் விதிர்த்து நின்று
வெறுங்கைகள் பிசைந்து விம்மி
ஆர்த்தழு தயலா ராயத்
தன்பறி வழகு மிக்காள்

பார்த்தன ளிறைஞ்சி யண்மிப்
பாண்டியர் மகள்கா ணென்ன,
ஓர்த்தன னுவந்து யானும்
பார்த்திவ னுணர்தி ரென்றான்.

122. தானையர் தகையா வண்ணம்
தனக்குநல் வழிசொல் லென்ற
கோனையென் தோழி கூடக்
குழைந்துயிர்த் திருந்தேன் மீண்டாள்
ஆனையை வென்ற ஆளி
மானினுக் கஞ்ச விஞ்சை
மீனைவெல் விழியாற் செய்த
விரகினை விளம்பு கென்றாள்.

123. அந்தண னல்ல னலென்
னாருயிர்க் கமுதா யிந்நாள்
வந்தழல் மதமா வென்றென்
மனம்புகு மன்னன் மாரன்
தந்தழல் காம வேழம்
தடிந்துளம் தளிர்க்க என்னைச்
சொந்தமாய் மணக்கத் தூண்டச்
சூழெனத் தோழி சொல்வாள்.

124. தனித்தவன் விழைவு சொல்லித்
தழையோடு தாமந் தந்தான்
குனித்தவிற் பகழி கொண்டோர்
குஞ்சரப் பகைகொன் றெங்கட்
கினித்தவ னினிய வுன்கட்
கிடைந்துழல் கின்றான் எம்மோய்
பனித்தலை விடுதி பார்த்தன்
பன்னிநீ என்றாள் பாங்கி.

125. பாண்டியர் விளக்கே நின்போற்
பான்மதி வழிவந் தானும் ;
பாண்டவர் குடிப்பேர் ; தாங்கள்
பஞ்சவர் ; பார்த்தன் தன்பேர் ;
ஆண்டவர் அவற்குஞ் சொக்க
ராவராம் ; தமிழும் ஆய்ந்து
வேண்டள வறிந்து ளானும் ;
வேந்தன்பால் விரைகின் றானும்.

126. கூடலார் கொடுக்க வேட்டுன்
கூட்டமும் புருவ வில்லும்
நீடலார் நீலத் தம்பும்
நின்னரு ளுடனே பெற்றிங்
காடலா ரனங்க ளுட்சி
யடக்கிநிற் கரச வாகை
சூடலார் விழவு செய்யத்
துணிந்துளான் வாழா னன்றேல்.

127. நம்மைமுன் செல்லச் சொல்லி
நமக்குமுன் நடப்பான் போலும்
அம்மைநீ யணியத் தன்வில்
லரதன வாழி தந்தான்
வெம்மையா லுனது மீனர்
விரலணி விழைவன், ஈதி ;
செம்மையீ தெல்லாந் தெய்வத்
திருவுளக் குறிப்பா மென்றாள்.

**வேறு**

128. பகல்போயது பலரும்பழ மதுரைப்பதி படர்வார்
அகல்வேமென ஆயஞ்சொல மெய்காவல ரணுக

நகல்வல்லவ ரிகலிப்பிசி நடைநோவழி நொடிகள்
புகல்வல்லன பலவுஞ்செவி புகுதாம னடந்தேன்.

129. பழுதில்லெழு நிலைமாளிகை பலபந்திகள் நிலவும்
முழுவெண்ணில வொளிர்தண்குடை முரசார்கொடை வழுதி
வழுவில்குடிக் கயலார்கொடி வளரும்விறல் மூதூர்
விழுஞாயிறு மெழுதிங்களும் விரவும்பொழு தூற்றேன்.

130. நாணுவித நன்மக்களந் நகருட்புக நானும்
மோனுவிரதங்கொண்டுள முழுதும்திறைகொண்டோற்
காணுவிழி யலமந்தழ அவனோடுறை மகிழ்வை
நோனுவிதிநொந்தேபுழை நுழைவாருடன்சென்றேன்.

131. பகடானிரை மேதித்தொறு பலமீள்தரு மிடையே
சகடாரொலி பொதுவர்குழல் தாயின்சிலை மணிகேட்
டகடாரிளங் கன்றங்கக வார்ப்போடெழி விளைஞர்
உகள்தாரிசை யவராடொலி ஒல்லென்றொலி கழுமும்.

132. மாடந்தொறும் வடிவம்பல வரிசைச்சுடர் மாலை
நீடம்தெரு நிறைவார்க்கிருள் நேராதொளி பகல்போல்
ஆடம்துகில் நிழலாநிலை பலமல்லிகை யவிரப்
பீடம்தளிச் சுடராவளி விளைநல்லொளி பெருகும்.

133. அந்தித்துனி வந்துற்றதெ னயர்வோடழி நெஞ்சில்
சிந்தித்துயர் காதல்நிலை செப்பித்துணை செய்ய
வந்தித்தெதிர் வளர்கோயிலில் வரமங்கையை வாழ்த்திச்
சந்தித்தெரு விட்டெங்கடி தாமப்பொழி லுற்றேன்.

134. எங்குற்றனை? எங்கண்மணி என்னுற்றது சொல்லென்
றங்குற்றழு மென்தாயர்சொல் லறியாதுட னழுவேற்
கிங்குற்றர சிபம்நிற்பதை எய்தாரெவர்? வதுவன்
பங்குற்றதென்? என்றேபடர் பரிகின்றனர் பலரும்.

135. மங்குற்றளை களைமன்னரின் வழிவந்தவள் வைகை
பொங்குற்றது காணத்துறை புகவிட்டது மன்னன்
அங்குற்றது மறியின்வரு மரிலோடுனைக் கழிவாள்
கங்குற்றலை யுறவந்திலை கரைகின்றன ளன்னை.

வேறு

136. எனதுளனோ யவரவலம் இருளைதொலைத் திடுவான்
தனதுரிய தாய்தழுவி தனிக்கொடையல் சென்றாள்.
மனதழியான் ஆயமுடன் மாளிகையு ளன்னை
கனதுயரங் களையவழி காணவிழைந் துற்றேன்.

137. இதுசெயுமுன் என்வரவோர்ந் தன்னையெதிர்ந் தெழ
கதுமெனக்கை கூப்புமுனம் கட்டியெனை முத்திப்[நான்
புதுமகனுன் பெற்றெனினுட் புகுந்ததெலாம் புகல்வை,
எதுகருதி ஏங்குதி ?ஆண் டெய்தியதென் னென்றாள்.

138. தியங்கியநான் செப்புமுனஞ் செவிலியவ ளுற்றாள் ;
உயங்கலை,நம் மொருமகட்கின் றுயிருயரன் புதவி
வயங்குவட மன்னன்,மகள் வதுவைபெற வரும்,நம்
கயங்கதுவக் காத்திவள்மெய்க் காதல்பெறுங் காளை.

139. என்றபொழு தன்னைமகிழ்ந் தென்னையணைத் தெடுத்துச்
சென்றனளென் தந்தைதிருச் செழியர்பிரான் தெய்வ
மன்றதிலென் மன்னன்விழி மகிழ்வரவேற் றென்னைத்
தின்றதவன் செய்யமுகஞ் சிறக்கணித்துத் திளைத்தேன்.

140. மறத்தகரி மருதமதில் வலவனைமுன் வதைத்துப்
புறத்தபொழிற் றன்மகள்பால் புகுவதையெய் தோட்டும்
திறத்தவனை யாய்புகழச் செம்மல்முறு வலித்தான்.
அறத்தொடுநின் றவள்மொழிகேட் டரசன்மகிழ் பூத்தான்.

141. அண்ணலொடு வந்தவையா ரந்தணனங் கறைவான்
பெண்ணழகி கண்ணிலருள் பெற்றதனைப் பேணும்

விண்ணவர்கோன் விறன்மகனல் விசயனிவன் மேனுள்
பண்ணியமெய்ப் புண்ணியமிப் பெண்ணுருவாப் பார்ப்பான்.

142. வார்த்தசிலை நுதல்விழியில் வாழ்வுநிலை பார்த்தான்,
பார்த்தனிவள் கைப்பிடிக்கும் பாக்கியமும் பார்ப்பான்;
சீர்த்திகொடைத் திருவுயரும் செழியஇவ ரிருவர்ச்
சேர்த்தறவாழ் வுயர்மணநீ செய்யவருள் செய்வை.

143. வில்விசய மீனர்தவ மேவுமியை பிவள்தன்
வில்லொடுமீன் வளர்வதனம் விளக்கும்; மதி விளங்குந்
தொல்வழிநும் மிருகுடியுந் தோய்தல்முறை; தமிழை
வல்லவட மொழிமணக்கும் வகைவழங்காய் வழுதி.

144. என்னலுமங் கிறைஞ்சியெழு மேந்தலையென் தந்தை
தன்னகலத் தார்வமொடு தழுவியய விருத்தி
மன்னவவென் நன்னுதனுன் வழங்குமுனுன் ஆண்மை
உன்னவளாக் கியதுழுவ லொத்துடையீ ருவப்பேம்.

145. காண்டிவம்போற் கற்புநிறை காதலுன தூரம்போ
லீண்டியசால் புடையிவளோ டின்பமெலா மெய்திப்
பாண்டியர்தொல் குடிவிளங்கப் பாவையிவள் பால்நாம்
வேண்டியநல் விறன்மகவை விரைந்துதவி வாழி.

வேறு

146. என்றவையில் எமைவாழ்த்தி இறைவனறி
வோர்கணிகள் இசைத்த நாளில்
மன்றல்தர வள்ளலெனை மருவியநன்
மங்கலத்தை மறவே னென்னுத்
தென்றலொடு சந்தனமும் தென்கடல்வெண்
ணித்திலமும் பொதியிற் றேக்கும்
நின்றதமிழ் நிலமுடையள் நினக்குரைப்பா
ணிலையிதென நிகழ்த்து நீயே.

147. குன்றரிய காதல்கொடு குளிர்வித்தென்
விழியிலெழில் மழைத்த கொண்டல்
நின்றதென வில்லாண்மை நிறுவியென
துயிர்காக்கும் நிமித்த மன்று
வென்றகளி றின்றுளது, வில்லொடவன்
விழியுரைத்த வெய்ய சூளை
நன்றறியும் பொழிலுளது, நல்லகரி
வன்னிகுழி நவிலெம் மூரில்.

148. மணந்துமகி ழிரவிலவன் அரமியத்துள்
மடியிலெனை வைத்து முத்தித்
தணந்தினிநான் வாழ்வதிலை, சங்கரனுர்
ஆணை,எனத் தந்த சொல்லை
உணர்ந்தமதி யெங்களிரு குலமுதல்வன்
உளனம்பன் வேணி யும்பர் ;
புணர்ந்தபழங் கிழமையவன் நெஞ்சறியும் ;
பொய்யான்,நீ புகல்வை யெல்லாம்.

149. உடல்தோய்ந்துன் னுளங்கலப்பா ரிருக்கவெனை
யுவப்பதெவ னெனநான் ஊடக்
கடல்கலக்கும் யாறனைத்துங் கங்கைகொலோ ?
கண்ணகல்வான் கலந்து காந்தி
யிடல்மகிழுஞ் சுடரனைத்துந் திங்கள்கொலோ ?
எல்லொளியில் விரியு மெல்லா
மடல்மலருந் தாமரையோ ? உணர்வுபுணர்
மொழியனைத்தும் தமிழோ ? மங்காய்.

150. கங்கைமதி மரைதமிழ்நீ, கடல்வானெல்
லுணர்வேநான், காதல் காலுன்
பொங்குமொளி முகநிலவார்ந் துயிர்வாழும்
புள்ளென்னைப் புலவாய், நல்லை ;

மங்கையுனே, மழைமறக்கும் பயிரெனினும்,
மறந்துயிர்நான் வாழ மாட்டேன் ;
சங்கைவிடுன் தமிழ்போலுந் தண்ணளியாற்
றழுவென்ருன், தகைமை சாற்ருய்.

151. மற்றையநாள் மகிழ்ந்துலவு மாடமிசை
மருவவர, மறுத்துத் திங்கள்
கற்றைவிழி காணுமென்றேன் ; என்முகந்தன்
கைமறைத்துக் களித்துக் காணுய்
ஒற்றைமதி ஒளித்ததினி யுட்குவதேன் ?
ஒல்லையினி உனதி ரண்டு
பற்றைகளாற் றழுவென,நான் பரிந்தணையப்
பரவசத்தால் பசைந்தோ மன்று.

152. அகங்குளிரத் தனிநிலவி லவனணைத்து
முத்தியென தழகை யார்ந்து,
மகளிரெழில் விளக்கென,நான் முகங்கருக,
மதிமறுவால் மரைகள் கூம்பல்
தகவெனில்தண் சேதாம்பல் மலர்தவியல்
பெனவிறைஞ்சித் தன்கை கூப்பி
மிகவணங்க, முறுவலித்தேன் ; மீட்டுமெனைத்
தழுவிமகிழ் மிதப்பச் செய்தான்.

153. பொழுதனைத்து மிரவாய்நங் காதல்நறும்
புதுமலர்க்குப் புலரி புக்குப்
பழுதெதுவும் தாராமல் படைக்கும்வலி
யுனக்கிலையோ ? பகர்தி, யென்றேன் ;
எழுதரிய எழிலுயிர்க்கும் ஓவியமே
நீவிரும்பி லெதுவுஞ் செய்வேன் ;
வழுதியற வண்மையிலே பிறர்வினைக்குப்
பகல்வழங்க மறுக்க மாட்டாய்.

154. கழுதுவிழை கங்குலினைக் கள்வரொடு
காமுகரே கருத லாவர் ;
பழுதறுநம் மெய்க்காதல் பகலிரவு
பகுத்துவளர் பான்மைத் தன்றே.
முழுதறமும் பொருளெதுவு மின்பமுளே
விளைவெனமுன் முன்னி யோர்ந்தே
எழுதிணையி லிருபொருளை யீந்ததமி
ழிறைவிபணி இழைப்ப னென்றான்.

155. பகலையறம் பலபகர்ந்துன் பாங்கரெனை
யகற்றுவதாற் பகைப்ப னென்னை
நகலினிக்கக் கவவுக்கை கசந்திரவை
நாணுதியோ நம்பி யென்றேன் ;
தகவுபணி வெனத்தனது கைகுவித்துத்
தண்மதியிற் றமிழ்ச்செவ் வாம்பல்
நகலியலென் றவனிறைஞ்ச, நகைமுகிழ்த்தேன் ;
நல்லைதமிழ் நங்கை யென்றான்.

156. மதிமுகம்தன் மகிழ்வென்றான் ; வான்மறைந்து
கூனுய்த்தன் மறும றைக்கும்
சதிதானே வுவப்பென்றேன் ; தாமரையைச்
சரிசொல்லத் தகுமோ என்றான் ;
வதிவாழும் வாடுமலர் மகிழுதியோ ?
மனக்கருத்தை மறையா யென்றேன் ;
புதிதுவமம் புகலென்றான் ; உள்ளமுகம்
போதுமென்றேன் ; புளகம் கொண்டான்.

157. பின்னொருநா ளவன்வனத்தென் தோழிநகப்
பேசிட,நான் பிணங்கி, யன்றென்
மன்னொடுரை மறுத்தவன்றன் மடிமகிழ்பெண்
பூவையையும் வைதேன் ; பூவை

தன்ஞெடுதான் சொன்னதுரை யெனத்துயர்கண்
ததும்பவுரை தளம்பி ஞன் ;' இப்
பொன்ஞெடுநின் கணவநிழல் தோயிஞுளங்
காய்வ 'னெனப் புகன்ற தன்றே.

158\. பூவைபுகல் மொழியென்ஃனப் புளகிக்கப்
புலவியெலாம் போக்கிப் பாங்கர்
பாவையழு திருப்பவஃளப் பொறுப்பையெனத்
தழுவினேன் ; பசைந்து பார்த்தென்
கோவையிதழ் தன்னிதழாற் குழையஅகங்
குளிரவுடன் குலவிப் புல்லும்
தேவையெஃனச் சினவாத திருவுளத்திற்
கொருகோடி தெண்டஞ் செய்தேன்.

159\. மாதொருத்தி விஃளயாட்டி லுடன்பிறந்தா
ரொருபெண்ஃண மணந்து வாழும்
தீதொருவார் வடவரெனச் சிரித்தவஃளச்
சினச்சிரிப்பாற் றெழித்து, வீரம்
யாதொருவர் தனியுரிமை ? யாவைபுநீ
யறிவைகொலோ ? யாழ கேள்நின்
பேதொருவாய் ; பாஞ்சாலன் பெண்ஞெருத்தி
ஐவர்மணம் பெறுமா றுண்டோ.

160\. வில்வளர்தோ ளிளவலப்பாஞ் சாலஃனப்போர்
வென்றதஞல் விசய னென்னும்
சொல்வளர வெற்றிமகள் தஃனமணந்தான்,
நடுவனவன் தொடர்பால் நல்ல
கல்வளர்தோட் சோதரரும் புகழவஞே
டுடன்கோடல் கறையென் பாரார் ?
மல்வளர்தோட் பாஞ்சாலன் வழங்கவனல்
மகண்மணந்தார் ; மறப்பா யல்ஃல.

161. அஞ்சவரு போரழலில் பாஞ்சால
னஞ்சலிக்க ஐய னவர்
தஞ்சமெனும் வின்னூலன் தனக்காக
வென்றவிறற் றகவு தந்தாள்
பஞ்சவரைப் புகழ்மடந்தை பொதுமணத்தல்
பண்பலவோ பகர்வா யென்றேன் ;
மஞ்சமறைந் தோர்ந்தவன்தன் மார்பிலணைத்
தெனைவழுத்தி மகிழ்ந்தான் மாதோ.

162. இவையெலா மவற்குரைப்பை ; என்னிலையு
மவன்கடனு மெடுத்துக் கூறி,
'அவையறியக் காதல்சொலிக் கைப்பிடித்திங்
குடன்வாழ்வன், அகலே னென்றான் ;
நவையெதுகண் டெனைநெகிழ் விடுவதென
நவில்கிலனு னறிவ தெங்ஙன் ?
சுவைபிறர்பால் நுகர்கவுழைத் தொழிற்றொடர்பே
விழைவ 'னெனச் சொல்லு வாயே.

163. நல்லார்பொல் லாரெனினும் ஓம்புவதாண்
அறமெனத்தான் நவின்றா னென்பால் ;
வில்லாள்வா னவனனோர் பொல்லாளா
மல்லளவன் விரும்பி வேட்டோள் ;
அல்லாக்கச் செய்வர்பிற ரல்லர் ;எனை
யளியாமல் அவன்வில் லாண்மை
ஒல்லாத பொல்லார்போல் கொடுமைசெயல்
ஒப்புரவோ உரனோ என்பாய்.

164. பொன்மானைப் பின்தொடரப் புருடனைவிட்
டவன்பின்னே புலம்பு வீரன்
தன்மானங் காப்பவனை வைதனுப்பித்
தனியிருந்த தருக்காற் றக்க

சன்மானந் தென்னிலங்கைச் சிறைபெற்ருள்
எனினுமவள் தனிமை தாங்காள்,
தன்மானத் தவிப்பனெனச் சிறைமீட்டுத்
தலையளித்தான் தகைமை சொன்ஞன்.

165. வில்லறமுந் தனைமணந்த மெல்லியலாள்
நல்லறமு விளங்க அன்னை
சொல்லறமுன் னேற்றதினுற் றூயபுக
ழேற்றபெருந் துணையில் வீரன்
இல்லறமுங் காதலறக் கடனும்விழை
சால்பினைஎவ் வெவர்க்குங் காட்டி
நல்லறமுன் னிறுவியதை நவின்றவனென்
நலமழிய நடத்த னன்றே.

**வேறு**

166. எதுவொன்று மவனேவ நானென்று
மனதார எண்ணிற்றிலேன் ;
மதுவொன்று மலர்வண்டு புதிதுண்ண
நலமீயும் வள்ளன்மைபோல்,
விதுவொன்று குடிவீரன் நிறையோடென்
னெழிலார வேளாண்மைசெய்
ததுவொன்று நினையாம லாளாம
லளியாம லவனிற் பதே ?

167. மதியென்று மலர்கின்ற குமுதத்தை
வஞ்சிக்கு மரைவாண்முகம்
கதியென்று கரைகின்ற வுயிர்வாழ
அருளென்ற காண்டீவனென்
நிதியென்று நின்றேனென் நிறைகொண்டு
கவல்கூரும் நிலைதந்ததென்
விதியென்று தமிழ்மாதர் விரல்சுட்ட
விடலாண்மை விறலாகுமோ.

168. மறவே னெனுஞ்சொல்லை மறவா
மனத்தேனம் மகிபன்வரும்
துறவா னவன்சொற்ற சூளென்றும்
இருவென்ற துணைவன்பணி
இறவாமை கடனென்று மிதுகாறு
மிறவா திருந்தேனெனை
யறவே தணந்தாரு மகிழ்நற்கெ
னுற்றுமை யறிவிப்பையே.

169. வம்பிக்கு மொழிவல்லர் நெஞ்சத்தை
வதுவைக்கண் வஞ்சித்துவாழ்
நம்பிக்கென் னிலையோதி நானுடு
நலமென்கொல்; நட்புற்றவர்
நம்பிக்கை கொல்வோ னெனப்பெண்டிர்
பழிகூற நங்கொண்கனும்
தும்பிக்கு மலர்போ தெலாமுண்ணல்
போன்மாதர் தோள்தோய்வதே.

170. சுனைநீல விழிவண்டு பொதுவுண்ண
மலர்நெஞ்சு தோம்அற்றெனை
நினையுங்கொ லென,யார்கொல்
பிறர்நம்மில்? நீநின்னை நினையாயெனில்,
அனையே னெனக்கொள்ள லாமென்
றவன்சொல்ல, அழுதேனியான்;
எனைவிட்டு னினைவுற்ற தெண்ணுய்கொ
லெனமுத்தி யிழவேனெனு.

171. தனைவென் றிரண்டற்ற தவயோக
நிறைஞான தருவேயெனை
வினைகொன் றுனருள்கொண்டு வீடெய்த
வைப்பாயென் வைப்பேயுனை

எனையன்றி வேறென்று கருதாஎன்
னிதயத் தினிக்குந்திரு
அனையாயென் அறிவேயென் அன்பூரு
மின்பென் றணைத்தானவன்.

172. தப்பின் றிரண்டொன்று மெனிலொன்
றெனல்மிக்க தவறாகுமால்;
அப்பொன்று முப்பென்ன அளவாதி
வேறன்றி யறவொன்றினும்,
ஒப்பின் றுயர்வுள்ளி யொருவா
வுளத்தின்ப முறுபோகமார்
வைப்பின்றி வீடுதேன் வாழ்வுன்னை
மறவாமை மனமார்வைநீ.

173. மகிழ்விக்கு நின்னோடு மகிழ்கின்ற
நானென்றி மருவுந்திரு
முகிழ்விண்ட மலர்நின்ற மணமென்று
மலரென்று வேறெண்ணுறு
நெகிழ்வித் திரண்டற்ற நிறைகந்த
மலரென்ற நிலையாகுமால்;
மகிழ்விக்கு மணநீ, அம் மணநாறு
மலர்நான், இம் மறையோர்வைநீ.

174. என்றேனை யிறுகத் தழீஇ, முத்தி
யீதுண்மை யெனமெய்சிலிர்த்
தொன்றே யிரண்டில்லை யென்பாரு
ளின்பத்தை யுணர்வாரலர்;
நன்றே யறிந்தேனம் மொருமைக்க
ணிருவேமும் நனிவாழ்வுறல்
தொன்றேயிம் மெய்கண்ட தமிழன்பு
தூய்தென்று தொழுதானரோ.

### வேறு

175\. இவையெடுத் தோதி யென்ற
னின்னலுக் கிறுதி காட்டக்
கவையிலா வுளத்தென் காதல்
கனிவுறச் செவிவா யூட்டி
நவையிலாப் புகழை மீட்டும்
நம்பியன் பறத்தி னூட்ட
அவையமன் றளித்த வண்மை
யவற்கறைந் தனுப்பென் மாட்டே.

176\. ஊணிலாள் உறங்காள் ஒன்று
முவப்பிலாள் ஓர்ப்பு மில்லாள்
பூணிலாள் வெய்ய நெஞ்சிற்
பொறித்துனை நினைந்து நையும்
மாணிலா வாழ்வு வேண்டாள்,
மனத்திலுன் காதல் மோதக்
காணிலாள் அலைக்குங் காமக்
கடற்கரை சேர்க்குந் தெப்பம்.

177\. முன்னையே யிறப்பள், நீயுன்
முகத்தெழி லமுதை யூட்டிக்
கொன்னையே யிறவாப் புத்தேள்
கொடுநிலை கொடுத்தாய், வேண்டாத்
தன்னையே வெறுப்பள் சாம்பித்
தண்கடற் குமரி தங்கி
உன்னையே உளத்துட் கொண்டிங்
குயர்தவ நோற்ப ளென்பாய்.

178\. தன்கடல் முத்தும் தன்தென்
சந்தனக் குழம்பு நுந்தொல்
நன்கலை மதியும் நோவள் ;
நாணிலாக் கயவர் போல,

மென்கலை தெரியாய் நீத்த
 மெலிவிடைப் பகைமை மேவிப்
புன்கணே பொழியும் வேளைப்
 புலம்பொடு பொருவ ளென்பாய்.

179. கூடலிற் றனிமை தாங்காள்
 குறைகடற் குமரி யெக்கர்க்
கூடலை யிழைத்துக் கொண்கன்
 கூடலுண் டாங்கொ லென்று
நாடலை நோற்கும் நானென்
 னலிவற நலங்க ளார,
'வாடலை வருவ னெ'ன்ன
 வன்புறை வழங்கக் கேட்பை.

180. காதலிற் றனித்தார் காமக்
 காய்வுநோய் கசப்பே யீயும்;
ஆதலி லமுதை வென்ற
 அவள்தமி ழாம்பற் பண்ணை
ஓதலி லுவப்புக் கொள்ளாள் ;
 உன்னரு ளில்லை யாமேல்
சாதலிற் பிழைப்புக் காணத்
 தகும்வழி தருவை என்பாய்.

181. பெண்மைமெய்ப் பெட்பே வாழ்வாய்ப்
 பேணுதல் குறிக்கும் பேர்,இவ்
வுண்மையா டவர்க ளோரார் ;
 உவப்பவற் றிடையோர் போது
வண்மையாற் காதற் கீந்து
 மகிழ்பவன் மனத்தென் னீர்மை
அண்மையுற் றுறைக்கு மாறங்
 கவற்குரைத் துய்தி தேர்வை.

182. மண்ணினில் மரத்தில் கல்வில்
மற்றொரு பொருளில் இன்றென்
கண்ணினில் கவினார் காட்சி
காதலால் பதித்தேன், காளை
எண்ணினி லெழுதொ ணாத
எழிலெலாம்; என்னி லன்னான்
கண்ணினிற் காதல் பொய்த்தான்,
கருத்தியல் மறைத்தான், கண்டாய்.

183. தன்னியல் பிறர்பாற் காணுந்
தன்மையே னன்னா னென்பால்
பன்னிய வனைத்துங் காதல்
பழுத்துவீழ் கனியென் றெண்ணி
மன்னிய மனைவாழ் மாட்சி
மகிழ்நனாற் பெறும்பே றென்ன
உன்னிய வுளத்தேற் கோங்கு
மூவகையன் றாட்டி னானல்.

184. அழல்தரும் வேனி லன்றி
அலைக்கும்வெம் பனியு மல்லால்
நிழல்தரும் காருந் தென்றல்
நின்றுலாம் பருவந் தானும்
கழல்தரும் காளை நாடு
கண்டறி யாதெக் காலும்;
தழல்தரும் பாலைக் கென்றே
சமைந்ததவ் வுலகம் போலும்.

185. கடலிலா நாட்டிற் பெண்டிர்
கண்ணெனுங் கடல்கள் தூர்க்கும்
உடலெழி லமுத மாரி
யுதவுகார்க் கேனென் னுள்ள

மடல்முளி வறத்தை மாற்ற
வரும்வரம் வழங்கா வன்கண் ?
அடலினும் பெண்மை யண்மை
ஆட்சியே ஆண்மைத் தென்பாய்.

186. எனைமறந் தினிய பெண்டி
ரெழில்நலம் நுகர்வ னேனும்
தனைநிக ரெழில்கள் தாங்குந்
தனயனை மகிழாத் தந்தை
எனையனும் உலகி லுண்டோ ?
இங்கவன் மதலை ஐயன்
நினைவொடும் வினவு வாற்கென்
நித்தநான் உரைப்ப தென்பாய் ?

187. பஞ்சைய ளல்லள், பார்த்தன்
பத்தினி, குடியில் யாரும்
பஞ்சவர் பகையை யஞ்சார்,
பரவைகால் படியப் பண்டை
விஞ்சைவாழ் இமயத் துச்சி
விளங்கமீன் பொறித்த வீரர் ;
நஞ்சமுண் டவனை யெங்கள்
நங்கையே நகையால் வென்றாள்.

188. காதலாற் பொறுத்தி யென்றென்
கற்பறங் காழ்த்த நெஞ்சம்
ஓதலாற் சினவேன், பெண்மை
உயர்புகழ்க் கூறென் றஞ்சி ;
கோதலாற் குணத்தை மேவான் ;
கோப்பெருந் தேவி போலச்
சாதலா லுய்வன், சாற்றாய் ;
தணந்தவற் றெறவும் வல்லேன்.

189. கண்ணுதல் விரும்பி வந்து
காதலால் மணஞ்செய் தாண்ட
மண்ணுடை மனைவி யென்னை
மணந்தபின் தணப்ப தன்னுன்
எண்ணுதற் கில்லை ; யென்னில்
என்னையிங் கிருத்தி யேதோ
பண்ணுநற் கரும முண்டேல்,
பகரொணுப் பான்மை தேருய்.

190. தன்னிக ரற்ற வீரத்
தலைமயனுக் கரசும் வீறும்
மன்னர்தம் வணக்க வாழ்த்தும்
வழங்கின வள்ள லேழை
நன்னுத லொருத்தி வாழ்வை
நலிவது பழியென் ருேதித்
தன்னற மோம்ப வந்து
தமிழரா சேற்கச் செய்வாய்.

191. ஆக்கலோ டழித்தல் நன்று
புரத்தலும் புரிவை யாகி
நீக்கமொன் றறியா தெங்கு
நிலவுமெய்க் கடவுட் காரே !
ஏக்கமுற் றழுங்கு மென்பா
லிரங்கியுன் இறைவன் சேய்என்
பாக்கமுற் றிடச்சென் ருேதப்
பரிவைநீ, பரவு கின்றேன்.

192. உலகுயி ரனைத்தும் தத்தம்
உழுவலாற் கூடி யுய்ய
அலகிலின் புறுத்துங் கார்நீ
அவனுளங் கரைத்தென் இன்னல்

விலகுமா றளித்துப் பெண்டிர்
தமியரை விரும்பிக் காக்கும்
இலகுயிர்த் துணையாம் சீர்த்தி
எழிலுற வளர்த்தி யென்றாள்.

வேறு

193. வழுதிகுல மடமயில்வண் கற்பகநீ வாழி
எழுதருநல் லெழிலுடையாய் எவர்க்குமரு ளுடையாய்
தொழுதெனது நன்றிநிதம் சொல்லியுனை வாழ்த்திப்
பழுதறநான் வாழ்வுறுமிப் பாக்கியம்நின் னளியே.

194. பிணிபசிகே டொழியவளர் பெரியதமிழ்ச் செங்கோல்
பணிகிலனுன் பட்டதனை பரிந்துதறித் தோய்செம்
மணிகுலவு மலரிதழ்வாய் வருநினது வண்மைப்
பணிபுரிவென் பாக்கியம்நீ பகர்ந்தவழிப் படர்வேன்.

195. திருந்துசிலைத் திருவுயர்நின் செம்மல்நினைப் பிழைத்துத்
தருந்துயர்நீ வருந்தலையத் தனஞ்சயனும் அறவோன்
மருந்துமொழி யூர்வசியின் மாலையற வெறுத்தோன்
விருந்தெனநின் விழிநிழலை விழைபவனு னறிவேன்.

196. மல்வளர்தோள் மகிழ்மணநீ வழங்கினதை மறவான் ;
செல்வன்விரைந் தொருமதியிற் றிரும்புவனற் செய்தி
எல்லவளை கையிறப்ப மெலிவெய்து படரிரியச்
சொல்வனவன் றூயவனீ துயரவயல் துஞ்சான்.

197. எல்லைகரி, யென்பணிசென் றியற்றியிறைக் கியம்பி
வல்லைவரு வேனினது வண்மைமற வேனுன் ;
தொல்லையுல காட்சியொடுன் தோணலநீ தரவும்
ஒல்லையுவந் துனைவழுத்தா னுளனெனினு னுணர்வேன்.

வேறு

198\. என்றவட் கியம்பி வாழ்த்தி
யெழுந்துநேர் வடக்கிற் சென்று
நன்றியும் நட்புந் தூண்ட
நடுவழித் தாழா தேகிக்
குன்றமர் தோளான் முன்னர்க்
குறுகிநல் லற்ற மோர்ந்து
பொன்றலி னுளத்தாள் காதல்
புகன்றது பொய்யா மாரி.

199\. வானவர் செருக்கை மாற்றி
மக்களை மதிக்க வைத்த
மானவண் வழுதி, வேம்பன்,
மாக்கடற் றருக்கைப் போக்கிப்
போனவன் பெருமை பேணேன்;
பூட்டின தளைநான் பெற்றேன்;
மீனவர் வீறு சொல்லும்
விழியினுள் விடுக்க வந்தேன்.

200\. பதிதணந் திடத்தன் கூடற்
பதிகசந் தவள்பாற் காய்ந்து
—மதிதொழ மறந்தா ளென்ற
வன்கணோ வஞ்சம் வேறோ—
கொதிதழற் குழம்பே கொட்ட,
குமரியிற் கொண்க னின்றி
வதிபவட் கிரவெந் நாளும்
வருத்தமே வழங்கும், நின்போல்.

201\. ஈந்துபொன் பொதிபூப் புன்னை
இறப்பில மணத்தை யென்றும்
ஏந்துபொன் மடலார் தாழை
எழிலடும் பெங்கு மேய

நீந்துநுண் மணலில் மூசு
நிலவியல் நிழலு நீர்மை
மாந்துதன் பெடையோ டன்றில்
மகிழ்தொறு மாழ்கு மேழை.

202. அவள்மயல் வீறு நஞ்சை
யழிக்குமன் பமுதப் பேறு
பவளவாய்த் தீரம் காதற்
பரவைநாள் கொழிக்கப் பம்பும்
தவளநன் முத்தார் மூரல்
தரத்தலை யளித்தாள், தக்க
உவளமென் றுவந்தா யன்ன
ளுழக்கநோ யூட்டு வாயோ ?

203. நனவிலுன் நினைவால் நையும் ;
நடுங்குமுன் நங்கை துஞ்சிற்
கனவுக ளடர்க்கக் கண்டே ;
காதலின் கசப்புங் கண்டே
வினவலர் வீழ்வா ரன்பின்
மெய்ம்மையை ஐயு றுதார்க்
கெனவிவ ளியலாற் கண்டே
னிறப்பள்,நீ யிரங்கா யென்னில்.

204. கற்பகத் திறையை வென்ற
கைதவன் கடற்றென் கன்னித்
தற்பரை கோயின் முன்னுன்
தவம்தவம் கிடக்க, அன்னாள்
அற்பறங் குழைந்தாங் கோர்சேய்
அமிழ்தெழு தமிழி லன்னை
கற்பற மிழற்றக் கண்டேன் ;
காணநீ நோற்று யல்லை.

205. கற்பினி லன்பி லொப்பார்
கடப்பவர்க் காணுள் தென்னர்
இற்பிறப் பாட்டி தெய்வ
எழிலொடு மிழப்பை யேயோ
பொற்பறி வுரனுல் நின்னைப்
பொறையளி பெட்பாஞ் சால்பால்
தற்பயந் தாளை வென்ற
தமிழ்மகன் மழலைச் செவ்வி.

206. தந்தையைக் காட்டக் கேட்கும்
தநயனைத் தழுவித் திங்கள்
விந்தையார் வேலை காட்ட
விம்முவன் ; விளையா டென்னப்
பந்தைப்பொற் பாண்டில் முத்தப்
படகினை யெறிவன்; பாலன்
நிந்தையாற் சிந்தை நைவான்
நிலையைநீ நினைவை யின்னே.

207. கன்னலைப் பழிக்குஞ் சொல்லாள்
கரையிலாக் காதற் பௌவம்
தென்னவர் வரைப்பின் மூன்று
திரைக்கடல் வளரும் செல்வம்
உன்னவை, விரைந்து வந்துன்
னுடைமைநீ யுரிமை கொள்வாய்,
என்னநல் லெழிலி சொல்லி
யேந்தலை வழுத்திற் றம்மா.

208. வந்துதென் மொழியில் வாழ்த்தும்
மாரியை வணங்கி வள்ளல்
செந்துவர் வாயிற் றெய்வச்
செழுந்தமிழ் மணக்குஞ் செல்வி

முந்துற வுணர்த்துந் தூதின்
மொழிசெவி மடுத்துக் காதல்
நந்துத லறியா நெஞ்சி
னம்பியும் நவில லுற்ருன்.

209. மதுவைவெல் சொல்லின் வல்லாள்
வண்மையால் மகிழ்ந்து முன்னே
வதுவையை வழங்கி மம்மர்
வாங்கின மடவாள், வஞ்சர்
பொதுவியல் புணர்த்தி யின்றென்
புரைபல புனைவ தென்னே?
வதுவியல் விழுமந் தாங்கி
மகிழ்நனை வழுத்த லன்ருே?

210. சேய்மையும் தெரிவை மாரும்
தினமவள் சால்பு செவ்வி
தூய்மையார் காதல் சொல்லத்
தொழுதழும் நெஞ்சம்; அன்னுள்
வாய்மையோர் வண்மை வாழ்த்தென்
மனமவள் வாழுங் கோயில்;
தாய்மையே தலைவாட் கிங்கென்
தவறிலாத் தன்மை சாற்ருய்.

211. துருபதன் மகளை வில்லும்
சுபத்திரை தனையின் சொல்லும்
தருபத மோர்ந்து வென்றேன்;
தமிழ்த்திரு வென்னைத் தன்பொன்
இருபதம் தலையி லேந்த
ஏவித்தன் காதல் முல்லை
வருபதம் வென்று தந்த
வண்மையை மறக்க வொல்லேன்.

212. ஆர்வலர்க் கரும்பு மன்பே
யாயத்தின் நட்பாம் போதாய்
நார்வலர் நயக்குங் காதல்
நன்மல ரெனக்கு நல்கி
ஏர்வலங் கொண்டாள் தன்னை
யேழையென் றியம்ப மண்ணில்
யார்வலர்? தலைமண் தான்பெய்
யானையான், யாதென் னூழோ.

213. தந்தைதன் னையரோடு தனையர்தம்
மாள நாளும்
சொந்தநல் லுரிமை யின்றித்
தொழும்பினைத் தொழும்பெண் வாழ்வு
செந்தமிழ் வழக்கன்று; ஆண்மை
தெரிவைமார்க் குரிமை செய்தல்;
அந்தர மொப்பர் பெண்ணுண்
அகம்புற மாட்சி கொண்டே.

214. மெல்லிய லார்கள் நல்லார்;
மெலித்திலர் மறத்தாண் மக்கள்;
இல்லியல் மெய்யாங் காதல்
மிதவையால் வீடு தேடும்
நல்லியல் தமிழர் நீர்மை;
நாங்களோ கடமை யென்னும்
தொல்லியல் வலிய ராளத்
தொழும்பற வீறு சொல்வோம்.

215. நல்லவை யெல்லா மாற்றல்
நங்கட னென்பர் தென்னர்;
வல்லவை வழக்கா றென்னும்
வடவரோ 'கடன்க ளெல்லாம்

நல்லவை, மெலியார் தம்மை
நலிவதா ணற'மென் பாரால் ;
சொல்லுவை துணிவென் றேற்கென்
துணைவியும் சூழ்ந்து சொன்னாள்.

216. 'கடவது கரவா தாற்றக்
கருதலே காட்சி' யென்ற
மடவரல் தமிழ்நன் மாற்றம்
வாய்மையால் மறையாக் கொண்டேன் ;
அடலர சார்வத் தண்ண
லாளுமா றவற்கு வேண்டி
வடநில வயவ ரோடு மலைதலென்
வாழ்வின் வாய்ப்பாம்.

217. அற்பினி லறத்தி லாழ்ந்த
அறிவினி லழகிற் காதற்
கற்பினி லொருத்தி யொப்பே
காணுக் கடவுட் பெண்ணாள்
எற்பிரிந் தினைவ தேயென்
இற்பெருங் கிழமை சான்ற
பொற்பினைப் புகழ்மை பூண்டு
போற்றநான் தாழே னென்பாய்.

218. புகழ்த்திறம் புரியேன் போகம்
வேட்டுநான் போனல், கூடல்
அகழ்ப்புறத் தாண்செய் வீர
ராரெனில் யாது சொல்வேன் ?
இகழ்க்கட லேறு வென்னை
யேந்திழை யெவ்வா றெண்ணும் ?
திகழ்த்திரு சினவா திந்தச்
செய்திநீ சென்று செப்பாய்.

219. ஆய்மயில் விடைகொண் டுற்றே
னவதிநான் வைத்தே னல்லேன் ;
பேய்மய லமரிற் பேணும்
பீழையென் பிழையென் றெண்ணிக்
காய்மனங் கவலா வாறென்
கடனறி காத லோடு
வேய்மயல் கொள்ளும் தோட்கென்
விழுமமும் விழைவும் விள்ளாய்.

வேறு

220. நன்று நானிவ ணுனில மன்னரை
வென்று வில்லற வேள்வி முடித்துடன்
சென்று செய்வனென் சேல்விழி சேவகம்
என்று நல்லவட் கென்முக மன்சொலாய்.

221. என்று மன்னவ னேவ விழைத்தெழில்
துன்று தோட்டுணைத் தொல்லற நன்னெறி
நின்று நித்தமும் மெய்த்தவம் நேர்வனுன் ;
சென்று செப்பெனச் செம்மல்கை கூப்பினன்.

222. வீரர் கைதொழும் வின்மற வீறுவாழ்
வார நெஞ்சினன் வாழ்த்தி வழங்குசொற்
சாரங் கொண்டதைத் தந்தது, தண்டமிழ்
ஈர நீர்மையட் கேமுகில் மீண்டதும்.

வாழ்த்து

வாழ்க ஏர்தொழில் ; வாய்மையு மோங்குக ;
வீழ்க தண்துளி ; வெம்பசி நோயுடன்
ஆழ்க தீயவை; முத்தமி ழார்மணம்
சூழ்க வையகந் ; தூய தழைகவே.

# தமிழ் வணக்கம்

## குறிப்பு

முதல் மூன்று பாடல்களும் தனிச் சொல்லின்றி வந்த சிந்தியல் வெண்பாக்கள் ஒரு பொருண்மேலனவாயுள்ளன.

1. தம்மையீன்ற அம்மையை என்று போற்றல் தலையாய அறமாம். எல்லோருக்கும் தாய் தமிழேயாம் ; ஆதலால் தமிழ் மொழியைப் போற்றுதுமென இந் நூலாசிரியர் தம்மொடு பிறரையும் உளப்படுத்துப் போற்றுதல் செய்வாராயினர்.

2. அம்மம்-முலைப்பால்; "அரவணையா யாயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே" "அன்னே யுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ் சுவனம் மந்தரவே" என்ற பெரியாழ்வார் திருமொழிகளி லிச் சொல் இப்பொருளிற் பயிலல் காண்க. தமிழ்மொழி பாலூட்டுதலுடையதாகக் கூறினுர், 'பாலேய் தமிழ்' எனப் பிற்காலத் தான்ரோர் கூறியவாற்ருன். இச் செய்யுளில், தாய்மார் தம் குழவிப் பருவத்து மகவுகளுக்கு முலைப்பாலூட்டுதலுடையாராகத் தமிழ்த் தாய் தன் மக்களுக்கு வாழ்நாள் முழுதும் சாலப்பாலூட்டுதலுடையாளெனத் தமிழின் மேம்பாடு தோன்ற உணர்த்தினுர்.

3. உயிர்களுக்கு இவ்வுலகின்கண் வேண்டுவன "தாரக போஷக போக்யம்" என இம் மூன்றேயாம் என்பது அறிஞர் கண்டது. இவற்றுள் தாரகம் - உயிரை உடலின்கண் நிலைப்பிப்பது. போஷகம் உடலை வளர்ப்பது. போக்யம் - நுகர்வாய் அமைவது. இதுவே முறையாயினும் ஈண்டுச் செய்யுணோக்கிப் "போனகமாய்த் தாரகமாய்ப் போக்கியமாய்" என முறை மாற்றிவைக்கப்பட்டன. தமிழ்மொழி தமிழர்க்கு இம் மூன்று நிலையினும் உறுபொருளாயமைவதை அறிந்துகொள்க.

---

# தமிழ்ப் பல்லாண்டு

1. தமிழணங்கின் பல்புகழும் நாம்பாடுதும் : அங்ஙனம் பாடிப் பரவுதுமேல் அவளால் அருளப்பட்டு உயர்வோம் : ஆதலின், ஒப்புயர் வில்லாத குழவிப் பருவ மொழியாய், மாருவிளமை, எழில், இனிமை இவற்றுக் குரியாளை நாம் ஏத்துவாம் என்க. இக் கவியுள் 'குழவி' 'கிழவி' என்ற சொன் முரண் காண்க.

2. கடவுளர்க் கேவல்தருமிறைவி - சிவனும், திருமாலும், முருகவேளும் செந்தமிழ்க்குத் தொண்டாற்றிய செய்திகள் ஈண்டு

அறிக. அழகியாள் அழகனைத்தும் கருவுயிர்த்தும், கன்னியாகவே உள்ளாளெனக் கூறிய நயம் பாராட்டற்பாற்று.

3. உயிர்கட்கு உள இருளகலுமாறு முன் தன் முறுவல் ஒளி ஒளிரவுதவி, மக்கள் உயர்திணையாய்ச் சுட்டப்படுதற்குரிய உணர் வுரைக்கவல்ல மொழியை, விலங்கினத்தினின்றும் மக்களை வேறு பிரித்தறியும் உரிமையாய் முதலில் உலகில் தந்தவள் என்க.

4. வசையைத் தரும் பாழ் வயதின்றி முன்பு உலகு முழுதும் பரவியிருந்த இத்தமிழன்னை, தன்னை நாடி வந்த வட சொற்குத் தன் உலகில் வட பகுதியை உரிய நாடாக ஈந்து மகிழ்ந்தாள். பின் பிற திசை மொழிகள் கருவழியுமாறு எப்பமிடத் தின்றொழித்த அச் செயற்கை மொழியாய வட சொல்லின் வன்பசி குறையுமாறு செய்து உயர்ந்த தமிழன்னையாவாள்.

6. உலகில் தோன்றி இறந்தன பல செயற்கைச் செம்மொழி கள். இறவாது நிலவும் நம் தமிழோ செய்யா நல்லியல்பிற்று. ஆத லின், காலமும், இடமும் தன்னை எனைத்தானும் தொடாமல் எல்லை யறியாத் தன்னிளமை நலத்தால் கற்புயர் காதலை மெய்யாய புல வோர்க்கு அருள் செய்வாள் என்க. காலவிடம் - காலமாகிய விடமுமாம். "வேகவதிக் கேதிரேற விட்டதொரு சிற்றேடு, கால நதி நினைக்கவராக் காரணத்தி னறிகுறியே" என்ற கவிஞர் கருத் தும் ஒத்து நோக்குக.

7. பொய்மொழியாத புலமை வளத்தைத் திருவள்ளுவர் போன்ற தெய்வப் புலவரும், அறிவறத்தின் உரிமையை நக்கீரனர் போன்ற சான்றோரும் தம் மெய்ம்மையாய மொழிகளால் வளர்த் தமைத்த புகழ் மடந்தையின் மடியில் வளர் தமிழ் மகளைப் பூமடந்தை தன் முதன் மகளாகக் கோடலில் வியப்பு ஒன்றுமின்றென்க.

8. பைஞ்ஞிலம் - மக்கட்டொகுதி : மக்கட்டொகுதி நாளும் ஆர்தற்குரிய பண்ணையிடமெனப் புதிய வழகும் மணமும் பொலி கின்ற மலர்ப் பொழில்களையும், கனியொடு தீம்பால் பெருகு பல வுலகுகளையும் பாக்களால் படைத்துத் தருபவள் தமிழன்னையாம் என்க.

9. கன்னிமை யழியாமல் கருவின் முதிர் கலைகளையும் கற்ப காலத்தும் அழிவெய்தாத கவியுலகையும் தருபவளாம் என்க.

# மாரிவாயில்—குறிப்புரை

(வித்வான் தி. போ. பழனியப்பப் பிள்ளையவர்கள் எழுதியது)

1. வீதலிலா - அழிவில்லாத. எழு ஓதிமம் - எழுமலை யென்ற வேங்கடம். முக்கடல் - மேற்கு, தெற்கு, கிழக்கு ஆகிய மூன்று திசையிலுள்ள கடல்கள்.

2. கவின் - அழகு. வழுதியர் - பாண்டியர்.

3. தூரத்து உரோமர் - சேய்மைக்கணுள்ள உரோமாபுரியினர். சீனர் - சீனதேசத்தார். ஒக்கல் - சுற்றம். திரவியம் ஐந்தாவன - மலை, கடல், காடு, நாடு, நகரங்களில் உண்டாகும் ஐவகைப் பொருட்கள். ஆரம் - ஒன்றுமுத்து, மற்றொன்று சந்தனம்.

4. ஊரி - மேகம்; அதனை ஊர்ந்து செல்லும் காரி - கரிய நிறத்தினனாகிய இந்திரன். அவனோடு சமாஞசனம் (உடனிருக்கை) கொண்டோர் பண்டைப் பாண்டியர் என்ற புராணச் செய்தியறிக. வாரி - கடல்.

5. கன்னி - அழிவின்மை.

6. பார்த்திவர் - அரசர். நடுவன் - நடுப்பிறந்தோன். பசலை - காதலன் பிரிவால் மகளிர் மேனியில் உண்டாம் நிறவேறுபாடு.

7. வேட்டவன் - மணந்தவன். உருவந்தீட்டல் - உரு எழுதி நோக்கி வருந்தல். ஊட்டம்-உண்ணல்; உணவுமாம். கொன்-பெருமை (இடைச்சொல்). சித்திராங்கதையை மணந்து பிரிந்த பார்த்தன் வடநாடு செல்லுமுன் குமரியாடச் சென்றானென்ற பாரதக்கதையை நோக்கிக் “கொழுநன் கூட்டம தறிந்த கொன்பழங் குமரி” எனப் பட்டது.

8. வேட்டவர் - விரும்பியவர். தெய்வகோட்டம் - கடவுள் உறை கோயில். முன்துறை - முற்பட்ட கடற்றுறை. சேட்டம் - ஆனி மாதம். சுசி - ஆடி மாதம். சிராவணம் - கார்காலத் தொடக்கமாகிய ஆவணி.

9. உக்கல் - பக்கம்.

10. பேதை - எழுவாய் ; செம்மல் - பெருமை மிக்க தலைவன். புரந்தரன் - இந்திரன். பொன்னூர்=பொன்னுலகமாகிய இந்திரபுரி.

11. அயலானுகிய அந்தணன் - பிராமண வடிவு கொண்டு தோன்றி யிரந்த அக்கினிதேவன். பாரதம் காண்டவ தகனச் சருக்கம் பார்க்க.

12. நந்தல் - கெடுதல். சொல்லும்பிந்த, உள்ளுணர்வு முந்த, மோனமே பெரிதும் பேசும்—நயமறிக.

13. வரதை - வரந்தரும் தெய்வம், தோழி 'தேர் அன்று, அம்புதம்' என்ன-தோழி இது தேர் அன்று மேகமே தோன்றுவதெனக் கூற.

14. காரினுக்கரசன் - மேகத்தை ஊர்தியாகவுடைய இந்திரன். போதகக்களிறு=களிற்றுப் போதகம் - இளமையான யானைக் கன்று.

15. ஓதநீர் - கடல்நீர் ; இங்குப் பாண்டியன் கடல்சுவற வேல் விடுத்த திருவிளையாடற் புராணச் செய்தியும், மேகத்துக்கு விலங்கிட்ட புராணச் செய்தியும் அறிக. செல் - மேகம்.

16. ஓதிமம் - அன்னப்பெடை. புளினம் - மணற்குன்று. கொண்மூ - மேகம். ஓர்த்த - ஓர்ந்த, எதுகை நோக்கி வலித்தது.

17. படிறு - வஞ்சம். இகுளை - தோழி. தணந்தான் - பிரிந்தான்.

18. ஒருவ - விலக. மாதிரம் - விண். ஆதரம் என் - ஆசையென்ற.

19. விதும்பல் - வேட்கையால் விரைதல். வெடி - இடி. தழல்வது - சுடர் விட்டெரிவது. காய்ந்த உதும்பரம் - பழுக்கக் காய்ச்சிய செம்பு. சஞ்சலம் - மின்னல். (இரண்டாஞ் சஞ்சலம் துன்பம்). தழல்வது என்னும் வினையாட்சியுண்மைக்கு 'தழன்றிதோ தடங்காத்து வெள்வேல் தவிர்ந்தது பார்' (தணிகை. சீபரி. 338) நோக்குக.

20. தளித்து - துளிபெய்து. முளித்த - உலர்ந்த. முடுகுவாய் - விரைவாய்.

21. இறை - கணப்பொழுது. விழைவு தன்மேவிட - ஆசையானது தன்னைச் சார.

22. துறை ஆர் தமிழ் - அகப்புறப் பொருட்களின் துறைகள் நிறைந்த தமிழென்க. துறைபோய் - தேர்ந்து. துவரைச் சிறுமி - சுபத்திரை, சிறுமி - குறிப்புச் சொல்.

23. பையுள் - துன்பம். இகுளைச் சிறுமகள் - உறவினளாகிய சிறுமி (சுபத்திரை). இச்செய்யுளின் பின்னிரண்டடிகளிலும் பின்னர் வரும் மூன்று செய்யுள்களிலும் நூலாசிரியர் வடநாட்டு ஆரியர் விரதம் நெகிழ்தற்குக் காரணம் காட்டுதலும், தென் தமிழர் பிறழா நெறி மேம்பாடு போற்றுதலும் அறிஞர் உற்றுணர்ந்து மகிழ்தற் பாலன. உகும் மெய் - உகுவது உண்மை.

26. அவன் உருவம் என் விழிவழி அகம்புக்கு நின்று அகலாத் தன்மை மெய்ம்மையே.

27. கருவி - மேகமே (விளி). அமிழ்துண்டவ ரிறைவன் - அமிழ்தமுண்ட தேவர்கள் கோமான்.

28. முகமரை - முகமாகிய தாமரைமலர். முனம் நின்மணம் முழவத்தளை வீடுற்றனன் - முன்புநின் திருமணத்திற்கு முரசொலி முழங்கற்பொருட்டு விலங்கினின்றும் விடுதலை பெற்றேன். ஈண்டு மேகம் சிறைவீடு பெற்றதற்குப் பிறிதோர் காரணம் கற்பித்துரைத்த திறம் வியக்கற்பாலது.

29. ஊடு ஆறி - வழியின்கண் ஆறுதலுற்று.

30. கல்மீது பகைநின்ற தோளண்ணல் - கற்றூணொடு மாறுபட்ட திண்ணிய தோளையுடைய தலைவன். ஐந்து தரு நீழலார் தந்தை, விண்மன் - வானுலகத்துள்ள கற்பக முதலிய ஐந்து தருக்களின் நிழலில் அமர்கின்ற தன் தந்தையும் விண்ணுலகத்துக்கு இறைவனுமாகிய இந்திரன். சொற்ற இவை - சொன்ன இச்சொற்கள்.

31. ஆரம் - சந்தனமரம். நாவாய் - கப்பல்கள்.

32. சாகம் - தேக்குமரம். மந்தி - பெண்குரங்கு. கடுவன் - ஆண் குரங்கு. பலவொன்று சிறுமந்தி - பலவாக ஒன்றிய சிறு மந்திகளுக்கு. பலவு ஒன்று - ஒரு பலாக்கனியை. கடுவன் பறித்து - ஆண் குரங்கு பறித்துக்கொண்டு. ஓர் பலாப்பலம் - இஃது ஒப்பற்ற பலாப் பழமாதலின், நீர் பங்கிட்டுண்மின் என, மந்திகள் ஊடலிற் புக்கன.

33. புயல்கண்டு ஆடல்புரியும் மயில்போன்று, ஆட்டம் கொள்ளுமாறு ஐந்து பொறிகளையும் பேதுறச் செய்யும் தகைத்தாய என உவமையை விரித்துரைக்க.

34. பண்ணை - மகளிர் ஆயம். பொன் இக்கு உறழ் தோள் - பொன்மயமாகிய கரும்பை யொத்த தோள். தொடலை - மகளிர் விளையாட்டு.

35. ஓடை - நெற்றிப் பட்டம். கருங்கன்னி - பார்வதி. பொன்னிக்கும் - காவிரியினும்.

36. எழிலீ - விளி. தங்கலை - தங்காமல், (முற்றெச்சம்).

37. கார் இறுத்ததனை - கார்காலம் வந்து தங்கியதனை. அம்பரம் - வானம். சுட்டிய - சுட்டுதற்கு. என் ஆரியன் - என் கணவனாகிய பார்த்தனின், மனமென - அளியற்ற மனம்போல.

38. பாடலம் - பாதிரி. தளவு இணர் - முல்லைப் பூங் கொத்து. உலவைகள் பாடவம் கொழித்திட - கான்யாறுகள் புதுப்பெயலாற் பெருக்கெய்த, அன்றிமரக் கொம்புகள் தளிர்த்துக் களிக்க என இரு பொருள் கொள்க. பாடவம் - களிப்பு.

39. மலயம் - பொதியமலை. பிறக்கு - பின். வையையாறு கடலொடு கலக்காமைக்குக் காரணம், முன்பு கடல் பாண்டி நாட்டினொரு பகுதியை விழுங்கியதாமென, ஆசிரியர் பிறிது காரணம் கற்பித்துக் கூறுவது அறிந்து மகிழ்க.

40. ஆரநறுந் தென்றல் - சந்தன மணம் வீசும் தென்றல். ஊதை - காற்று.

41. தறுகண் - அஞ்சாமை. மலைவார் - போர் செய்வார்.

42. கப்பக் கிழி - கப்பப் பொருளாகிய பொன் முடிப்பு.

43. தேன் - வண்டு.

44. கோட்டம், அகில், குங்குமம், தக்கோலம், கறி (மிளகு) இவை குறிஞ்சிப் பொருள். நெல், இக்கு (கரும்பு), இளநீர் - மருதப் பொருள். வளை (சங்கு), வித்துருமம் (பவளம்) - நெய்தற் பொருள். நாவி (புனுகு), தேன் - முல்லைப் பொருள். நானிலப் பொருள் பண்டமாற்று நிகழ்வதாக அமைத்த அழகு அறிக.

45. கண்பருகி - கண்ணுற் பருகி. தலையல் - புதுப்புனல்.

46. விளையுள் - விளைவிப்போர். ஓவாமை - ஒழியாமல்.

47. மேழி-ஏர். ஆடவர் மேழி நண்புடைமையையும், நல்லார் விருந்தையும் நாளும் போற்றி என்க.

48. களமர் - வயலின்கண் தொழில் புரிவோர். சாறு - விழா. நள்ளார் - பகைவர்.

49. மலயத்தை ஓர் ஆன் எனக் கூறியதற் கேற்ப அதனி னின்றும் வருகின்ற பேராறுகள் நான்கினையும் முலைக் காம்புகளாகக் கூறியது அறிக.

50. குடப்பொருநை-மேற்குத் திசைக்கண் உள்ள ஆறு. வான வர் - சேரர். குபேரனுக்கும் இந்திரனுக்கும் தனித்தனி யுரிமை யாம் திருவும் தருவும் ஒருங்கு வளரும் வானவர் நாடென்ற சேர நாடு. ஆதலின் இந்நாட்டு வானவர் விண்ணாட்டு வானவரினும் சிறப் புடையா ரென்றபடி.

51. தாளம் - முத்து. வழுதி - பாண்டியன். சிமிலம் - மலை யுச்சி. குடம் - குடநாடு.

52. மல் - வளம். பீடு - பெருமை. நதம் - மேற்கு நோக்கிச் செல்லும் யாறு. கோடு - கொம்பு.

53. புணரி - கடல். குடம் - குடநாடு.

54. கொங்கர் அலையினைப் புகுந்து மூவாக் கடம்பு எறிந்து ஆண்ட செய்தி சிலப்பதிகாரத்தாலுணர்க. செம்மாந்து - களித்து. ஆனைத் தடமலை - ஆனைமலை யென்னும் ஓர் மலை.

55. இளநிலவு எறிக்கு மூரல்முத்து - இளமையான ஒளியைப் பரப்பும் பற்களாகிய முத்துக்கள். மூளரியின் முகத்தர் - தாமரை மலர்போன்ற முகமுடைய மகளிர். வைகல் - நாட்காலை. நீலமலை - நீலகிரி. குழலை - கூந்தலை. மாரி - மேகம்.

56. மஞ்ஞை ஆல - மயில்கள் ஆட. வேய்தர - போர்வை செய்ய. மஞ்சு - மேகம்.

57. வேய்தரும் குழல்கால் ஊத - மூங்கிலாலாகும் குழல்களில் காற்றுப் புகுந்து ஊத; மென்சிறை - மெல்லிய சிறகையுடைய பறவைகள். கலுழி - கலங்கல் நீரருவிகள்.

58. குடகடல் கொடிய மனத்தாருடைய இருள்செறி உள் ளத்தின் ஆழத்தை யளக்கும் எனவும், அதன் பக்கல் நின்ற நெடு மலயம் நடுநிலை மனத்தாருடைய சால்பின் உயர்ச்சியைக் காட்டும் எனவும் கூறிய சிறப்பு உணர்க.

59. குடநாகம் - மேற்குமலை. அகல்நாகம் - அகன்றவான். தாலம் - பூமி. குதூகலத்தின் கூலம் - களிப்பின் எல்லை.

60. மாமை - நிறம். மருமம் - மார்பு. வானி - மலயத்தெழுந்து கிழக்கோடும் ஓர் யாறு. தண்ணடை - வயற்புலம்.

61. வெளவி மகிழ் மீளி - வெளவுதற் றொழில் விரும்பிய அருச்சுனன் ; அவன் மார்பு பல மகளிர் நலங்களைத் தோய்ந்து பொதுவாயதுபோலப் பலவற்றையும் வாரிவரும் இரண்டு பெண்ணை யாறுகள்.

62. சாரை - சாரைப்பாம்பு. சாரசம் - குருகு - வெண்ணாரை. சகுலி - மீன்.

63. முட்டி - தடைப்பட்டு. குரகம் - நீர்வாழ் பறவை. ஈண்டு நீர்ப் பூக்களைப் போன்றே பறவை ஒட்டியுற நீர் அறா ஊருணி கள் பல என்றபடி.

64. உழுவல் - பிறப்புத் தொடர்ச்சி பெற்ற அன்பு. நாற்று நடுங்கால் இந்திர தெய்வதம் தொழுது விழவயரும் வழக்குண்மை பெரியபுராணம் நாட்டுப் படலம் கஉ-ம் செய்யுளில் காண்க.

65. தொண்டை - தொண்டைநாடு. தமிழிற் பண்ணார் பாசுர மிப்பாலும், சாமகானம் அப்பாலும் பாட இடையே அமர்கின்ற திரு மால் குன்றமாகிய வேங்கடம். இண்டை - தாமரை. செய்ய இண்டை நல்விழியனென்றது பத்தருக்கருளும் திருநோக்குடையான் என்பது குறித்து.

66. கிஞ்சுகம் - கிளிகள். கொடுநுதி - வளைந்தமுனை. கொவ் வைச் செவ்வாய் - கோவ்வைப்பழம் போலுஞ் செவ்விய அலகு. கொஞ்சும் - மழலை பேசும்.

67. துழனி - ஓசை. வேங்கடம், ஆதியில் முருகன் திருமலை யாகவும், பின்னர் திருமாலின் திருமலையாகவும் அமைந்த செய்தி உணர்த்தப்பட்டது. போதி - மலை. போதிய - போது என்னுந் தெரிநிலை வினையடியாய்ப் பிறந்த இறந்த காலப் பெயரெச்சம். ஓதிய என்பதுமது.

68. அத்தம்-நீரில்லாத நீளிடை. புளிஞர்-வேட்டுவர். பம்மல்-நிறைதல். மம்மர்செய் அளக்கர் - மயக்கந்தரும் அளவில் வெளி.

69. முசு - குரங்கு. தென்பொழில் - தென்னந் தோப்பு; அழகிய தோப்புமாம்.

70. நித்திலம் - முத்து. வித்துருமம் - பவளம். பகரும் - விலை கூறும். அருந்ததி - ஒருமலை.

71. பம்பும் - பரவும். புழல் முதிரும்பணை - உட்டுளையுடைய மூங்கில். பணை - வயல்.

72. அவல் - பள்ளம். யாணர் - புதுமை. பம்பை யென்ற பெயர்க்கேற்ப அருது நீர் பெருகும் பேறு பிழையாத பெரிய புகழை யுண்டுபண்ணும் பொய்கை. சாறு - விழா. தென்கங்கை - கோதா விரியின் பெயர்.

73. படப்பை - தோட்டம். அறல் - நீர். பவ்வம் - கடல். கீழ் கடலே மேல் மலையின் அழகு பார்க்க வந்ததென விரிந்தொழு கும் கோதாவிரி, நெய்தனில ஊரான பாக்கங்களிலும், மருதநில ஊராகிய ஊர்களிலும், முல்லைநில ஊரான பாடிகளிலும் உலவிச் செல்லுதல் கூறப்பட்டது.

74. மருமம் - மார்பு. அலைமகிபன் - கடலரசன். வார்க்கும் - பெண்ணை நீர்வார்த்துக் கொடுக்கும் வழக்கைக் குறித்தது. குடை தல் - நீராடுதல். கடலின் தடக்கை போலச் செல்லுமெனவும், வார்க்கும் தண்ணீரின் ஒழுக்கென்னச் செல்லுமெனவும், இயைத் துப் பொருள் கொள்க. செல்லுங் கோதாவிரி, குடையுங் கோதாவிரி எனவு மியைக்க. கடல் தன் காதலியான தென்னில மகளின் மார் பில் தன் தடக்கை கொண்டு தழுவுதல் போலவும், மலையரசன் தன் மகளான தென்னில மடந்தையை அலையாசன் விரும்பி மணக்க மகிழ்ந்து வார்க்கும் நீரின் ஒழுக்குப்போலவும் என்று தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க. ஈண்டுக் கோதாவிரியின் ஒழுங்கு இரண்டுருவகத்தால் விளக்கப்படுகின்றது.

75. தொன்று - பழமை. நீத்தம் - வெள்ளநீர். செங்குடக்கு - நேர்மேற்கு. தீரம் - கரை.

76. தொடுகடல் - தோண்டிய கடல்; கீழைக்கடல். தொன்று முதிர் பௌவம் - பழையதாகி முதிர்ந்த கடல்; மேலைக் கடல். தோம் - குற்றம். காமுற்று ஆர் குடக்கு ஓடும் - விரும்பி அவ்விருப் பிற்குப் பொருந்த மேற்காய்ச் செல்லும். பேம் - அச்சம்.

77. உழுவை - புலி. வயமா - வலிய யானை. மூரிப்பாந்தள் - வலிய பெரும் பாம்பு. சாழல் - மகளிர் விளையாட்டு. நடமாடும் - திரியும். இச்சொல் இப்பொருட்டாதல் "நடமாடுங் கோயில்" என வரும் திருமந்திரத் தொடரினுள்ளும் வழக்கினுள்ளுங் காண்க.

78. வளாகம் - வரைப்பு. கலங்குபு - கலங்கும்படி. 'நக்குபு புக்கு' என்று கம்பர் கவியிலும் செய்பு என்ற எச்சம் செயவென னெச்சப் பொருட்டாதல் காண்க. "வினையெஞ்சு கிளவியும் வேறு பல் குறிய" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் இஃதமையும். விந்தியமலை கோதாவிரி பாய்கின்ற தென்னிலப்பகுதியை வடக்கே கங்கை நிலப்பகுதியினின்றும் பிரித்துக் குறுக்கே கிடக்கும் இயல்பை இப்பாட்டு விளக்குகின்றது. மாசுணம் - பெரும்பாம்பு.

79. அறத்தொல்லை நாகரிகம் - மிகப் பழைய சீர்மை.

80. மஞ்சு - மேகம். மிண்டி - நெருங்கி. இருமலைத்தொடர் - கிழக்கு மேற்கு மலைத்தொடர். குடகுணக்காய் - மேற்கும் கிழக்கும் தென்வடலாய் ஓடி இரண்டு மலைத்தொடரும் குமரியருகே கூடுதலாற் பிறந்த தற்குறிப்பேற்றம். விந்தமலை யரசன் தன் காதற்குரியதென் னில மகளை இருமலைத்தொடர்களாகிய கரங்களால் தழுவிக்கொண் டானென்பது குறிப்பு.

81. வியல் - காடு. உந்தரம் - வழி. எவ்வம் - துன்பம். கந்த ரம் - நீர் தாங்கிய மேகம். அக்காட்டு வழியில் நீ நெருங்கினுல் உனக் கியல்பான நீர்த்தன்மையை யுண்டு, உனக்குத் துன்பத்தைத் தரும்; ஆதலால் அணுகாமல் உயர்ந்தோங்கிப் பறந்து அவ்வனத்தைக் கடப் பாயென்பது இப்பாட்டின் கருத்து.

82. முளியோமை - காய்ந்த ஓமைமரம். குடிஞை - கோட் டான். கூன் - ஆந்தை.

83. தறுகணர் - அஞ்சாமையுடைய வேடர். தரக்கு - புலி. காழ் - கவண்கல். சூறை - சூறைக்காற்று. உலவை - மரக்கொம்பு.

84. பிணவு - பெண் விலங்கு. புனிறு - ஈன்றணிமை. விடர் - மலைப்பிளவு. போத்து - ஆண்புலி. முள்முளரி - முட்செடி நிறைந்த காடு. நுணவுலவை - நுணுமரத்தின் கொம்பு. எருவை - கழுகு. எருவைமுடி - இரத்தந் தோய்ந்தமுடி. நுங்க - விழுங்க. அணவுழி -

நெருங்கும்பொழுது. அழல்புலி - சினந்தபுலியை. அப்புலியைக் கழுகு அறைந்தடர்க்கும்படியான காடு.

85. மாந்து - உண்ணும். ஈந்து - ஈச்சமரம். ஈகை - ஒரு கொடி வகை. இவரும் - ஏறும்.

86. வெவ்விடமுண்டவன் - சிவபெருமான். இயவு அயர்வு - வழியிலுண்டான இளைப்பு. இற - நீங்க.

87. உரன் உளம் - வலிமை பொருந்திய உள்ளம். அறல் - நீர். பயசு - நீர். கொண்கன் - தலைவன்.

88. யாணர் - புதுமை. பாணர் - பாடுவோர். பஞ்சவர் - பாண்டவர். ஆண்ர் - வளமை, நன்மை. மால் யமுனை - கரு நிறமுடைய யமுனையாறு.

89. இறைமை - தலைமை. வாரம் - அன்பு.

90. ஓரை - மகளிர் விளையாட்டு. சீரை - மரவுரியாடை. ஆரை - மதில். கூரை - கூரை வேய்ந்த சிறு வீடு.

91. பொம்மல் - மிகுதி. நியமம் - பெருந்தெரு.

92. நடுநாவல் வடபாதி - உலக நடுவாய நாவலந் தீவின் வட பகுதி. நேரார் - பகைவர். வழிகூறி - வழிபாடுரைத்து. மன் சூயம் - இராஜசூயம் எனப் பெயரிய வேள்வி.

93. வைப்பு - நிலவெல்லை. பாவாணர் - பாடும் புலவர். பாண் மக்கள் - பாணர்குலத்தோர் (ஏத்துவோர்).

64. தெய்வப் பழந்தமிழரசி தூங்கள் பெண் - பாண்டியகுலத் துத் தோன்றிய தடாதகைப் பிராட்டியார்.

95. சிவபெருமானைத் தென்றமிழர் கடவுளென்ற அருமை யறிந்தின்புறுக. நியமம் - கோயில்.

96. கோட்டிப் பாட்டை - கோபுரவாயில் தெரு. பித்தியின் புழை-ஊர்ப்புற மதில்வாயில். கோபுரவாசல் தெரு கோட்டை வாசல் வரை நீளச் சென்று சேரும். பீடிகை, மன்றம், பள்ளி, சத்திரம் முதலியவை இடவிசேடங்கள். பீடிகை - கடைவீதி. தண்டம் - யானை செல்வழி. மாதிகம் - குதிரை மார்க்கம்.

97. பொன்றளி - பொன் மயமாகிய கோவில். முகடு - உச்சி. பதாகை - கொடிகள்.

98. முதல்வன் - முன்னையவனாகிய வீமன். மூன்றான் - மூன்றாமவனாகிய நகுலன். "வஞ்சகத்தி லொன்றானைத் துதிக்கைமிகத் திரண்டானை வணங்கார் நெஞ்சி, லஞ்சாண மூன்றானை" என்ற பரங்கிரிப் புராண அடியில் மூன்றாமவன் எனும் பொருள் தொனிக்கப் பிரயோகம் வந்திருத்தல் காண்க. வள்ளல்-அருச்சுனன். இளவல்-சகதேவன். வாமம் - இடப்பக்கம். ஏமம் செய்ய - காவல்புரிய. அலத்தல் - துன்புறல். ஆழியோச்சும் - ஆணை செலுத்தும்.

99. படங்கு - கூடாரம். மூரிவானரம் - வலிய குரக்குக் கொடி.

100. நாவி - புழுகுப்பூனை ; நவ்வி - மான். உகளும் - தாவும். "காவியம் உருக்கொண் டென்ன" உவமைநயம் அறிந்தின்புறுக. ஓவியம் - சித்திரவுரு. சிலதியர் - தோழியர்.

101. மன்று - அவையிடங்கள். பளிக்குத் தெற்றி - பளிங்காலமைத்த திண்ணை ; சித்திரகூடமுமாம். கொட்பு - சுழற்சி. வாமம்- இடப் பக்கம். ஒளியுமாம். வாசி-மிகுதி - சிறப்பு. பலவுள் வாசியார்- பலவற்றுள்ளுஞ் சிறப்பு மிகுந்த.

102. சூதர் - ஏத்துவோர். பால்பயில் மொழியார் - பால்போல் மொழியார். செம்மல் - தலைவன்.

103. நளினம் - தாமரை. உவமன் - ஒப்புமை.

104. ஆரம் - மாலை. நூல் - முந்நூல்.

105. துழனி - ஓசை. பாலையில் - பாலைப்பண்ணில்.

106. அரமியம் - அரண்மனை, நிலாமுற்றமுமாம். உளர்நரம்பின் - ஒலிக்கும் நரம்பின் இசைபோல. தும்பி - வண்டு. தனிக்கும் ஆங்கண் - தனித்துறையும் அவ்விடத்து. கடுத்து - ஐயமுற்று. கடுகி-விரைந்து.

107. எழிலி - மேகமே, விளி. அனாற்கு - அன்னாற்கென்பதன் இடைக்குறுக்கம். உரும் உரை - இடிமுழக்குப் பேச்சு. மனையாள் நல்லூழ் - மனையை ஆளுகின்ற நல்வினை.

108. இங்கிதம் - குறிப்பு. ஒன்னார் - பகைவர். வாளாள் புரவலன் - வாட்படையை ஆளும் அரசன்.

109. பீழை-மனத்துயர். மாழை-அழகு. ஊழ்மங்கைமார்-முறைமையுடைய பெண்டிர். உய்த்தாள் - செலுத்தினுள், அனுப்பினுள்.

110. சூலமார் கடவுள் - சூலப்படையையுடைய சிவபெருமான். துனி - துன்பம், பிணக்கம். சேவகக்கடன் - வீரர்க்குரிய கடப்பாடு.

112. விந்தை - வியப்பு. விளவு, கருவி யென்பன மேகத்தின் பெயர். உங்களிருவர் காதலுக்கும் விளவாயும் கருவியாயும் இருக்கின்றேன் என்பது குறிப்பு. மும்முறை - காண்டவதகனம், இந்திரலோகம், மதுரையில் மணநிகழ்ச்சி, என்ற மூன்று சந்தர்ப்பம். முகமன் - உபசாரச் சொல். அணுக்கம் - நெருக்கம்.

113. செழியர், பழையர், வழுதியர் என்பன பாண்டியரின் பெயர்கள். பெருமனைக்கிழமை - நினது பேரில்லாளும் உரிமை.

114. தற்பரை - இறைவி. நோற்பாள் - தவங்கிடப்பாள். காதற்கடன்புரிகடங்காண்கல்வி - காதற்குரிய செயல்களைப் புரியுமுறைமை. கடம் - வழி, முறை.

115. என்கொண்கன் பொன்றலில் புகழ்போனின்ற பொருவிலன்பு - என் தலைவனுடைய பொன்றுதலின்ற புகழ்போல் நிலைபேறுடைய அன்பினை.

116. மருதமுன்றுறை - திருமருத முன்றுறையென்ற இடவிசேடம். புறக்கா - புறத்தேயுள்ள பூஞ்சோலை. உம்பல் ஒன்று அவண் உருத்து - யானை யொன்று அவ்விடத்துச் சினந்தெழுந்து. பன்னம் - இலை.

117. தெருமா - சுழல. வாளி - அம்பு. பிளிறி - ஓலமிட்டு. புழைக்கை - துளையுடைய கை. ஆளி - சிங்கத்தையும் வெல்லும் ஒரு மிருக விசேடம். அளித்து - அன்பு காட்டி. யாணர்நோய் - புதிய காதல் நோய். குளித்தவன் - (ஈண்டுப் பிறவினை) பதியச் செய்தவன்.

118. காதல் நீத்தம் - அன்பு வெள்ளம். நெஞ்சம் யாத்தவன் - நெஞ்சைப் பிணித்தவன். யாணர்நோய் - புதியகாதற் பிணி. புளகம் - மயிர்க்கூச்சு.

119 பழையர் - பாண்டியர். மாணி - பிரமசரிய நிலையினன். நெகிழ்த்தவா - இளகச் செய்தவாறு. மாழ்கி - மயங்கி.

120. அயிர்த்து - ஐயமுற்று. தகவு - தகுதி. மறுகும் - கலங்கும். ஊர்நகை - ஊர்மாக்கள் இகழுரை ; வாய்க்குள் அரும்பும் நகையுமாம். என்னுள்ளம் கருதி, முன்னி, மறுகும் என வினைமுடிபு காண்க.

121. ஆயம் - தோழியர்குழு. அன்பு அறிவு அழகுமிக்காள் - தோழி. பார்த்திவன் - அரசன்.

122. 'ஆனையை வென்ற ஆளி மானினுக்கஞ்ச' என்றதன் நயம் ஓர்க.

123. அழல்மதமா - சினந்தெழுந்த மதம் பொருந்திய யானை. மாரன் தந்து அழல் காமவேழம் தடிந்து - மன்மதன் தந்ததனால் சினக்கும் காமமாகிய யானையை வலியடக்கி.

124. தாமம்-மாலை. பகழி-அம்பு. கட்கு இடைந்து - கண்ணுக்கிற்குடைந்து. எம்மோய்-விளி. பன்னி-பத்தினி. பனித்தல்-நடுங்கல்.

125. 'தாங்கள் பஞ்சவர்' என்பது அவர்கள் ஐவர் சகோதரர் என்பதையும் பாண்டியரைப் போலவே அவருக்கும் பஞ்சவர் என்ற பெயரொற்றுமை யிருப்பதையுங் குறித்தவாறு.

126. கூடலார் - நான்மாடக் கூடற்பதியாராகிய நின் தந்தை. "உன் கூட்டமும்.........அடக்கி" யென்றது துணைவலிக்கு நின்கூட்டமும் வினை வலிக்குப் புருவ வில்லுங் கண்ணம்பும் நின்வாழ்த்துடன் பெற்று அநங்கன் படையாட்சி யடக்கி யென்றவாறு. அரசவாகை - அநங்கனை யடக்கிப் பெறும் வெற்றியை அவளுக்குச் சூடி விழவு செய்தல்.

127. அரதன ஆழி - மணியழுத்திய கணையாழி. வெம்மை - விருப்பம். மீனர் விரலணி - மீன்பொறித்த கணையாழி. ஈதி - ஈவாய்.

128. நகல்வல்லவர் - நகையாடுந் தோழியர்கள். பிசி - பிதிர். நொடி - விடுகதை - அல்லது நகை மொழி. நடை நோவழி - நடையில் நோவுண்டாங்கால் அதுகெட.

129. பந்தி - வரிசை. கயலார்கொடி - மீனக்கொடி. விழுஞாயிறும் எழு திங்களும் விரவும் பொழுது - சூரியன் விழுதலும் சந்திரன் எழுதலுமுடைய அந்திமாலைப் பொழுது. திங்களஞ் செல்வனை முதல் வனுகவுடைய பாண்டியர் குலத்தவள் ஆதலின் 'எழுதிங்கள் விரவும் பொழு'தென்று இவள் அந்திமாலையைக் குறித்தது பொருத்தம்.

130. மோனுவிரதம் - மோனவிரதம் எனற்பாலது எதுகை நோக்கி நீண்டது. ஆனுவிழி - அவளைக் காணுமல் ஆற்றமாட்டாத விழி. மகிழ்வை நோனுவிதி - இன்பத்தை நோற்றுப் பெறுவிதி; நோல் - பகுதி. புழை - திட்டிவாசல்.

131. பகடு - எருது. ஆனிரை - பசுக்கூட்டம். மேதித்தொறு - எருமைக்கூட்டம். சகடு - வண்டி. பொதுவர்குழல் - இடையர் புல்லாங்குழலொலி. சிலமணி - ஒலிக்கும் மணியோசை. அகடு - வீட்டினகம். அகவு ஆர்ப்பு - அழைக்கும் ஒலி. உகள் - குதித்தல். கழுமும்-நிறையும்.

132. சுடர்மாலை - விளக்கின் ஒழுங்கு. மல்லிகை - தூண்விளக்குக்கள். பீடுஅம்தளி - பெருமையும் அழகும் பொருந்திய கோயில். சுடர் ஆவளி வளைநல்லொளி - திருவாச்சி விளக்கு.

133. எதிர்வளர் கோயிலில் வரமங்கை - எதிரிலுள்ள திருக்கோயிலில் எழுந்தருளிய வரதையாகிய அங்கயற்கணம்மை. வந்தித்து வாழ்த்தியென வியைக்க. கடிதாமப் பொழில் - மணப் பூஞ்சோலை. காவலும் ஒளியுமுடைய சோலை யெனினுமாம்.

134. அரசிபம் - அரச யானை. வதுவன் - பாகன். தாயர்-பாராட்டும் செவிலித் தாய்மார். படர்பரிதல் - நினைந்து வருந்தல்.

135. மங்குல் தளைகளை மன்னர் - மேகத்தைச் சிறைவீடு செய்த பாண்டியர். அரில் - குற்றம். உனக்கு அழிவாள் - உன் பொருட்டு வருந்துவாள். கங்குற்றலை - இராப்பொழுது. கரைகின்றனள் - மெலிகின்றாள். அன்னை - பெற்றநற்றாய்.

136. அவர் என்பது ஆண்டு வந்த செவிலித்தாயரை. அவலம் - துன்பம். இகுளை - தோழி. தனது உரியதாய் - தோழியின் உரிய தாயாகிய செவிலி. கனதுயரம் - மிகுந்ததுன்பம்.

137. 'இது' என்பது மாளிகையுட் சேறல். இப்பாட்டின்கருத்து:- மகள் வரவறிந்து எதிர் கொண்டு வந்த நற்றாய் தன் மகளுக்கு மதயானையால் யாதும் ஏதம் நேர்ந்ததோ என்று கருதிக் கவன்றவள் மகளின் நல்வரவு கண்டு அவளை அன்று புதிதாகப் பெற்றெடுத்தது போல உணரும் தன் மகிழ்ச்சி கூறித் திருமருதந் துறையில் அன்று நேர்ந்ததைச் சொல்லும்படியும், தன் மகள் முகத்தில் (காதல்) கவலைக் குறிப்புத் தோன்றுவது கண்டு அவள் கவலையின் காரணத்தைச் சொல்லும்படியும் கேட்டாள் என்றபடி. "புது மகள் நான் பெற்றனன்" என்பது இடரொழிந்து உய்ந்தமையின் அருமை பற்றிய பாராட்டு.

138. உயங்கலை - வருந்தாதே. மகட்கு இன்று உயிருயான் புதவி - அரசகுமாரிக்கு மதயானையை விலக்கி அவளுயிரைக் காத்த லோடு தன் மேலான அன்பையும் அவட்குதவி. வதுவை - மணம். வடமன்னன் வரும் - வடநாட்டு மன்னனான அருச்சுனன் வருவான். நம் கயம் - நம்முடைய பட்டத்துயானை. கதுவ - அகப்படுத்த. இப் பாட்டில் மதயானையினின்று காத்தகாளை அவளுக்குத் தன் காதலைத் தந்து அவள் மெய்க்காதலைத் தானும் பெற்றான் என்ற வரலாறு குறிக்கப்பட்டது.

139. மன்னன் விழி என்னை வரவேற்றுத் தின்றது - பாண்டி யன் மன்றத்திலிருந்த அருச்சுனன் சித்திராங்கதை அங்கு வந்த பொழுது குறிப்பால் அவள் வரவின் மகிழ்ச்சி காட்டியதோடு தன் கண்களால் அவள் அழகையும் உண்டுகளித்தான் என்றபடி. "கண் ணுங் கொளச்சேறி நெஞ்சே யவை யென்னைத்-தின்னு மவற்காண லுற்று" என்ற குறளால் காதலர் கண் அவரைத் தின்னும் என்னல் புலனெறி வழக்கம் என்று தெளியப்படும். சிறக்கணித்து - கடைக் கண்ணாற் குறுகநோக்கி. திளைத்தேன் - மகிழ்ந்தேன்.

140. பூவை - சித்திராங்கதை. திறத்தவன், செம்மல் - அருச் சுனன். அறத்தொடு நின்றவள் ஈண்டு நற்றாய்.

141. அண்ணலொடு வந்தவையா ரந்தணன் - அருச்சுனனோடு அந்த அவையில் வந்தமர்ந்த அந்தண நண்பன். பெற்று அதனைப் பேணும் எனவும் பிரித்துக் கொள்க. பார்ப்பான் - பார்க்கின்றோனுயி ஞன். பார்ப்பார் வடிவத்தவனுயினுன் என இருபொருளது.

142. "சிலைநுதல் விழியில் வாழ்வு நிலை பார்த்தான்" என்பது அவளின் ஒரு நோக்கில் தன்முழுவாழ்வும் நிலைத்தலை நோக்கினான் என்றபடி. சிலைநுதல் அன்மொழித்தொகை. ஈண்டும் பார்ப்பான் என்பது மேலதேபோற் பொருள் தரல் ஓர்க.

143. வில்விசயம், மீனர்தவம் என்பன முறையே இலக்கணை யால் பார்த்தனையும் சித்திராங்கதையையும் குறிக்கின்றன. மீனர்- மீனக்கொடியையுடைய பாண்டியர். பாண்டியர் பாண்டவர் திருக் குலங்க ளிரண்டுக்கும் திங்களஞ் செல்வன் முதல்வனுகி அவற்றூற் றூன் விளக்க முறுகின்றூன் என்னும் பொருள்பட "மதி விளங்குந் தொல்வழி நம்மிரு குடியும்" என்றூர். தமிழை வடமொழி மணக்

கும் என்று காட்டிய ஒப்புமையால் செய்ய மென்னீர்மையும் வெய்ய வன்னீர்மையுமுடைய பெண் ஆண்பாலார்தம் சிறந்த பண்புகள் இழைந்து ஒன்றியிடும் பெருமிதம் குறித்தமை யறிக.

**144.** அகலம் - மார்பம். உழுவல் - பல்பிறப்புத் தொடர்ச்சி யுள்ள அன்பு.

**145.** காண்டிவம் திண்மையாற் கற்பிற்கு ஒப்பாகக் கூறப்பட்டது. அவள் கற்பு காண்டிவம் போற்றிட்பமும், அவள் காதல் அவன் அறிவுபோல் தெளிந்த நிறைவும் உடையது.

**146.** கணிகள் - சோதிடர்கள் "தென்றலொடு............நின்ற தமிழ்நில முடையள்" இதனோடு திருக்காளத்திப் புராணம் நக்கீரச் சருக்கத்தில் வரும்,

> " அமுதுறழ் தமிழொண் முத்த மையசந் தனமெல் வாசம்
> கமழ்குளிர் தென்ற லென்று கரையரும் பொருள்ப டாமல்[ளித்
> இமிழ்கடல் வரைப்பெ லாந்தோன் றெண்பொருள் படுநா டெள்
> தமிழ்முதல் பிறங்கு நாடாய்த் தயங்குமாற் பாண்டி நாடு "

இச்செய்யுளை ஒப்பிடுக. "பொதியிற்றேக்கும்" பிற நாட்டில்லாது தமிழ் நாட்டின்கண்ணேயே உளதாகிய தென்பதும் ஈண்டு இந் நூலாசிரியர் ஆராய்ச்சியிற் கண்டு கூறி வைத்தது கண்டு தெளிக.

**147.** சூள் - உறுதியுரை. அவள் விழியை வயலாக்கி அவன்தன் அழகு மழையை அவ்விழி நிரம்பப் பெய்யும் ஒரு மேகம்போல நின் றான் என்ற உருவகம் வியந்து மகிழத்தக்கது. கைம்மாறு வேண்டாது பெய்யும் கொண்டல்போல அவள் விழி களிக்க அழகால் ஊட்டி மகிழ்வித்தான் என்பது அவனைக் கொண்டலென உவமித்த கருத்து. விழி யுரைத்த வெய்ய சூளை - என்பது வாயாற் பேசாமல் தன் காதலையும் அதனால் அவளைப் பிரியாது மணந்து மகிழ்விப்பேன் என்ற உறுதி யுரையையும் தன் நோக்கக் குறிப்பால் வெளிப் படுத்தினான் என்பது. அப்படி அவன் பகர்ந்த காதற் சூளை கரி பகரக் கண்டவர்களில்லை யெனல் வேண்டா; அவ்விடத்து நின்ற களிறும் கடிகாவுமே போதிய சான்று கூறும். இவை அஃறிணைப் பொருள் பேசா என்னில், மதுரையில் வன்னிமரமும் கிணறும் முன்னமொரு மணத்திற்குக் கரிபகர்ந்த கதை திருவிளையாடலிற்

கேட்கப்படுதலால் அவ்வூர் யானையும் பொழிலும் இம்மணத்திற்கும் சான்று கூறும் என்று பார்த்தனுக்குச் சொன்னாள் - என்பது பாட்டின் குறிப்பு. "வென்றகளிறு" என்றதன் குறிப்பு தன் மிடலடக்கின அருச்சுனன்பால் கறுவுகொண்டு வாய்ப்புழி அவனுக்கு எதிராகக் கரிபகரும் என்பதாம். (மழைத்த கொண்டல் - மழை பெய்யத் திரண்டமுகில்.)

148. அரமியம் - மேல்மாட நிலாமுற்றம். முத்தி - முத்தமிட்டு. தணந்து - பிரிந்து. "உணர்ந்த மதியெங்களிரு குலமுதல்வன்" என்பது இருகுலத்திற்கும் ஒரு முதல்வனாகலின் நடுவுநிலையிற் பிறழான் என்பது குறிப்பு. "உளன்நம்பன் வேணியும்பர்" என்பது இறைவன் திருமுடியிற் றங்கியதாழை பொய்யுரைத்து இழிதவுற்றதை யோர்ந்து அவ்வுயரிடத்தைச் சேர்ந்திருத்தலான் தேய்ந்திறவாமை யெய்திய தானும் இழிதகவடைந்து இறக்கும்படி பொய்யுரையான் என்று குறிப்புக் காட்டியவாறு.

149. எல் - சூரியன். இது முதல்வருங் கவிகளுள் புலவி நுணுக்கமும் காதல் நயப்பும் ஆசிரியர் கூறுவன அறிவாற் சூழ்ந்தறிந்தின் புறற்பாலன.

150. மரை - தாமரை; முதற் குறைவிகாரம். நிலவார்ந்துயிர் வாழும் புள் - சகோரம். புலவாய் - புலத்தல் வேண்டா. சங்கை - ஐயப்பாடு. "பயிர்மழை மறக்குமெனினும் மறந்துயிர் நான் வாழமாட்டேன்" என்பது பயிருக்கு மழைபோல எனக்கு நீ இன்றியமையாதவள் என்பது குறிப்பு.

151. உட்குவது - அஞ்சுவது. பற்றை - காந்தள்; ஈண்டு உவம ஆகுபெயராய்க் கையைக் குறிக்கும். அவள் முகமறைக்க மதியே மறைந்ததென்று கூறுவதால் மதியவள் முகமே என்பதனைக் குறித்தான் என்பது.

152. பிறமகளிரையும் அவர் எழிலையும் அவன் தன்முன் வியந்தானெனக் கருதிப் புலந்து முகங்கருகினாள். "மதிமறுவால்... ......அவன் வணங்க" என்பது மதிக்கண் மறுப்போல அவள் முகத்தின் சினக்குறிப்புத் தோன்றலால் மறுவற்ற எல்லொளிக்கு விரியும் தாமரை மறுவுடை மதிகண்டு கூம்புவதுபோல அவள் புலவிக்கண் அவன் தாமரை மலர்போன்ற தன் கைகூப்பினான் என்றபடி.

" மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியு ளுரிய " (தோல். பொருள் 227 சூ)

என்பதனால் தலைவியைத் தலைவன் வணங்குமிடம் புலவிக் காலமென் பது புலனும். மதியுள்ள விடத்து ஆம்பல் மலருதல் இயல்பாதலால் உன் முகமதியிலுள்ள வாயாகிய ஆம்பல் முறுவலால் மலரவேண்டு வதும் இயல்பென்பதைச் சுட்டினான் என்பது.

153. அறம் நோக்கும் வள்ளன்மையுடைய நங்கையாதலின் உலகோர் வினைகளுக்குப் பகலினை வழங்க மறுக்கமாட்டாய் என்ற வாறு.

154. கழுது - பேய். " அறமும்......விளைவு " - அறம் பொரு ளிரண்டும் இன்பத்திற்கு மூளையும் விளைவுமாயிருக்கின்றன என்பது. எழுதிணையிலிருபொருள் - அகப்பொருள் புறப்பொருள் ; இவ்விரண் டும் எழுதிணையா யமைந்து ஒழுகலாறு பெறல் தமிழ் வழக்கு. இனி உயருமொழுக்கத்தால் இம்மை மறுமையாகிய இருமைப் பொருளை யும் எய்தற்குதவும் நூல் நிறைந்த தமிழுக்குத் தலைவி யென்றும் கொள்ளலாம்.

155. 'தண்மதியில்......அவனிறைஞ்ச'-மதியொளியில் ஆம்பல் கூம்பாது மலர்தலியல்பு, உன் முகமதியில் வாயாம்பல் முறுவலால் மலர வேண்டு மென்று கூறி அவன் வணங்க. நல்லை - அண்மை விளியாகவேனுங் குறிப்பு முற்றாக வேனும் கொள்ள அமையும்.

159. வடவர் - வடநாட்டினர். ஒருவார் - நீங்கார். பாண்டவர் ஐவரும் பாஞ்சாலி யொருத்தியைப் பொது மணந்ததைக் குறித்துத் தோழி இயற்பழித்தாள். யாழ - முன்னிலை யசைச்சொல். பேது - பேதைமை. ஒருவாய் - விடுவாய்.

160. இளவல் - சிறுவயதினனாகிய அருச்சுனன். நடுவன்-நடுப் பிறந்தோன். கறை - குற்றம். சொல் - புகழ். அனல்மகள் - நெருப் பிற் றோன்றிய துரோபதை. நடுவன் கொண்ட புகழை அவன்முன் னவரும் பின்னவரும் ஆகிய சோதரர்கள் ஒருங்குடன் கொள்ளுதல் இயல்பேயாம் ; யாரும் அதைக் குற்ற மென்னார். பாஞ்சாலன் பெற்ற மகளல்லள் ; தீயிற் பிறந்தா ளொருத்தியை அவன் தர ஐவர் மணந்தார் என்ற கதைக் குறிப்பையும் உற்று நோக்குவாய் என்று தோழிக்குக் கூறினாள்.

157. கணவதிழல் - கணவம் - அரசமரம் ; கணவநிழல் - அரசினிழலும் கணவனிழலு [illegible]
நிற்றலரிய

161. ஐயன் - பார்த்தன். விஞ்னூலன் - துரோணன். தம் வில் லாசிரியனுகிய துரோணன் பாண்டவரை வேண்டித் தூண்ட அவ ராளாய்ச் சென்று அருச்சுனன் பாஞ்சாலனை வென்று வணங்கிய வெற்றிப் புகழே பாஞ்சாலியெனப் படுவாள். துரோணருக்காக ஐவ ரும் கையுறையாகத் தரவிரும்பிய பாஞ்சாலனை யடர்த்த வெற்றி அவ்வைவர் ஆளாய்ச் சென்ற அருச்சுனன் கொண்டாலும் அது ஐவருக்கும் பொதுவுடைமையாவது தவறில்லை யென்பது குறிப்பு. மஞ்சம் - பள்ளிக் கட்டில். மறைந்தோர்ந்தவன் - அக்கட்டிலிற் பின் னிருந்து இக்கூற்றைக் கேட்டுவந்த அருச்சுனன். தோழி இயற் பழித்தமை மறுத்துத் தலைவி இயற்பட மொழிந்ததை யறிந்து வியந்து தழுவி வாழ்த்தி மகிழ்ந்தா னென்பது குறிப்பு.

162. நவை - குற்றம். சுவை-காம நுகர்ச்சி. உழைத்தொழில் - தலைவற்கு அருகிருந்து அறம் பேணுந் தொழில்.

163. வேட்டோள்-மணக்கப் பெற்றவள். அல்லாக்க-துன்பமுற. அல்லாத்தல், செம்மாக்க என்பனபோற் றிரிந்து நின்றது. அல்லாக் கச் செய்வர் பிறரல்லர் - அந்நியரால் அலமரும் பெண்டிரைக் காப் பது ஆண்மை யறம் என்ற அருச்சுனனே தான் விரும்பி மணந்த மனைவியை அல்லலுறச் செய்வது ஆண்மையும் ஊனுமாகாது.

164, 165. இவ்விருகவியையும் ஒரு தொடர்ப்படுத்துப் பொருள் கொள்க. 'பொன்மானை......பெற்றாள்' சீதை பொன்மானுகிய மாரீ சன் பின்பு இராமனை யனுப்பிப் பின்னர் இலக்குவனையும் அனுப் பிக் காவலிகழ்ந் திருந்தமையாற் சிறைப்பட்ட செய்தி யறிக. தன் மான - தன்னை யொப்ப.

166. விது - திங்கள். வேளாண்மை - உபகாரம். "பூவோரனை யர் பொற்றொடிமாதர் வண்டோரனையர் கணவர்" என்ற அடிகளை யோர்க. மதியென்று கருதி மலர்கின்ற குமுதத்தை (அல்லியை) வஞ் சிக்கத்தக்க அழகு வாய்ந்த முகமென்க. மரைமுகம் - தாமரை யொத்தமுகம், எனத் தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க; "துப் புறழ் தொண்டைச் செவ்வாய்" என்ற சிந்தாமணிச் செய்யுளிற் போல. கவல்கூரும் - கவலைமிகும்.

167. "தமிழ் மாதர் விரல் சுட்ட" என்பது பேசற்கஞ்சி விர லாற் சுட்டிப் பழிக்க என அருச்சுனன் கொடுமை கூறியது.

"சிலரும் பலருங் கடைக்கண் ணோக்கி
மூக்கினுச்சி சுட்டுவிரல் சேர்த்தி"

என்ற நற்றிணைப் பாட்டினை ஒப்பு நோக்குக.

168. பணி இறவாமை கடன் - கட்டளை கடவாதிருக்கும் கற்புக் கடன். தணந்து - பிரிந்து. "ஆரும் மகிழ்நற்.........அறிவிப்பை" - இந்திரப் பிரத்தத்தில் பிற மனைவியரோடு நிரம்ப மகிழ்ந்து தன்னை மறந்திருந்த அருச்சுனனைத் தான் மறக்கலாற்றாத தன் காதற்றன்மை கூறுகின்றாள்.

"நம்மை மறந்தாரை நாம் மறக்கமாட்டேமால்" என்னும் சிலப்பதிகார அடி சிந்திக்கத்தக்கது.

169. இக்குமொழி - கருப்பஞ்சாறு போன்ற இன்சொல். கொண்கன் - கணவன். தும்பி - வண்டு. "தும்பிக்கு......உண்ணல் போல்" இதனுடன் "வண்டேயனையர் மாந்தரென்பது, பண்டே யுரைத்த பழமொழி" யென்ற பெருங் கதையடிகளை யொப்பிடுக.

பல பெண்டிர் பாலும் நலந்துய்க்கும் பரத்தைமையுடைய காதலனைத் திருத்துவதரிதெனினும், நட்டாரை நட்டாற்றில் நழுவவிடுப்பான் என நல்லார் நவிலும் பழிச்சொற்கஞ்சி விலக்கும் நோக்கத்தோடு அவனுக்கு அக்குறையை மனங்கொள்ளக் கூறுதலை மாரியிடம் வேண்டினாள் என்பது குறிப்பு.

170, 171. இவ்விரண்டனையும் ஒரு தொடராகக் கொண்டு பொருள் காண்க. தோம் - குற்றம். "சுனைநீல......மலர் நெஞ்சு"- சுனையில் நிற்பதால் வாடாத நீலமலர் போன்ற பரத்தையர் விழிகளாகிய வண்டு பொதுவாக நுகரும்படி மலர்கின்ற உன் நெஞ்சு. 'தோம் அற்று எனை நினையுங்கொல்' - அத்தகைய பரத்தமை யொழுக்கக் குற்றம் நீங்கி என்னை நினைக்குமோ என்று தலைவி வினவினாள்.

"யார் கொல்பிறர் நம்மில்.........என்றவன் சொல்ல" - நினைப்பவர் நினைக்கப்படுபவரினின்றும் வேறாதல் வேண்டும்; நாம் ஈருடலோருயிர்க்காதலராதலின் ஒருவரை மற்றொருவர் நினைப்பதேன்? நீ யுன்னை மறக்கக்கூடுமெனில் யான் உன்னை மறத்தலுங் கூடுமென்றான். தன்னை மறத்தலுங் கூடுமென்ற தலைவன் சொல்லளவிற்கே தலைவியழ. "எனை விட்டுனினைவுற்றதெண்ணாய் கொல் என முத்தியிழவேனெனா" - என்னை அறமறந்து உன்னையே நானாக

நினைப்பன் என்ற என் உள்ளக் கருத்தறியாமல் என்னை நினைத்து உன்னை மறப்பேன் என்றது போற்கொண்டு அழுவது முறையா எனக் கூறி என்னை முத்தமிட்டு இனி யுன்னை இழக்கமாட்டே னென்ருனக. 'முத்தி யிழவேன்' என்பதில் எனக்கு வீடுபேருகிய உன்னை யிழக்க மாட்டேன் என்ற குறிப்பும் தோன்றும்.

171. தனைவென்று - தன்னை வென்று. வைப்பு - நிதிப்பொருள் முன்பாட்டில் 'இழவே னென' என்ற தொடரை இப்பாட்டில் அணைத்தானவன் என்பதனேடு கூட்டி முடிக்க.

172. தப்பின்று இரண்டு ஒன்றும் எனல் - இருபொருள் ஒன்ருக் கலத்தல் கூடுமென்றமட்டில் தனக்குச் சம்மதம். 'எனில் ஒன் றெனல் மிக்க தவருகும் - கலந்தாலும் இரண்டில்லாமல் ஒரே பொரு ளாகி விடுவதாகக் கருதுவது நிரம்பக் குற்றமாகும். 'அப்பொன்றும் உப்பென்ன.........வீடேது' - நீரிற் கலந்த உப்பின் வண்ணம் வடிவு, முகத்தலளவு முதலிய குணங்களை யிழந்து நீரளவிற் கரைந்து நின்ருலும், நீரிற்கு உப்பு சுவை தந்து நிற்கும். அவ்வாறு உப்பும் நீரும்போலக் காதலால் இரண்டறக் கலப்பினும் காதலர் ஒருவரே யாய் விட்டதாகக் கருதல்கூடாது. ஒருவரேயாவரெனில் அக்காத லர் ஒருவரை யொருவர் காமுற்று மகிழ்தல் கூடாதாகும். தன் தன்மை யிழவாமல் இன்புறுவதே வீடுபேருகும். அவ்வாறின்புருர்க்கு வீடில்லை. அன்றியும் இறைவனேடு தன்னை யொப்பக் கருதும் உயிர்க்கு ஆனந்தம் அரிதாகும். இறைவனின் உயர்வை நினைந்து மற வாது வழுத்துதலில் உயிர் நிரதிசய இன்பம் அனுபவிக்கும். அது போல் பல பண்புகளால் ஒத்த காதலர் தம்மை ஒத்தாரெனக் கருதா மல் ஒருவர் மற்றவரைப் பரஸ்பரம் உயர்ந்தாராக மதிப்பதால் மட்டும் இன்பம் நிலைபெறும் என்ற தத்துவமும் இப்பாட்டில் விளக்கப் படுகிறது.

173. திரு, நிலையாகும், என முடிக்க. மறை - இரகசியப் பொருள். இக்குளகச் செய்யுட்களில் இரண்டறக் கலக்கும் இன் பத்தைத் தம் காதலொருப் பாட்டுக்கு உவமை கூறித் தலைவன் பாராட்டினுன். அக்காதற் கலப்பை யேற்று அதற்கு வடநாட்டார் கொண்ட கேவலாத்துவிதப் பொருண்மையினை மறுத்துத் தென்னு டுடைய சிவனையே போற்றும் சித்தாந்த சைவ அத்துவித வுண்

மையை வற்புறுத்திக் காதலர் அவ்வாறு கலத்தல் வேண்டுமெனத் தலைவி எடுத்துக் காட்டினுள்.

174. "முத்தியீதுண்மை" என்ற தொடர், முத்தமிட்டு, இதுவே உண்மை எனவும், இதுவே முத்தியென்பதுண்மை யெனவும் இருபொருள் படநிற்பதறிக. மெய்கண்ட தமிழன்பு - மெய்மையாகக் கண்ட தமிழ்க்காதற் றிறத்தோடு மெய்கண்ட சைவசித்தாந்த முத்தித்திறத்தையும் இத்தொடரிற் சிலேடையினமைத்திருத்தல் காண்க. தொன்றே யென்பது இவ்வுண்மைகளைத் தமிழர் பண்டே கண்டாரென்றும் வடவாரியனுன அருச்சுனன் அதுவே தூய்தென்றும் பாராட்டித் தொழுதான் என்பதாம்.

175. இன்னலுக்கிறுதி - துன்பத்தைப் போக்குநெறி. கவை - கவர்த்தல்.

176. நெஞ்சில் பொறித்து - உள்ளத்திற் படமெழுதி. காணிலாள் - காணுள்.

177. கொன் - வீணே; ஐகாரம் பெற்றுக் கொன்னையென நின்றது. இறவாப்புத்தேள் கொடுநிலை - இறவாத தேவர்க்குரிய கொடிய நிலையைக் கொடுத்தாயென வெறுப்பினு லிகழ்ந்துரைத்தமை யறிக. காதலனைப் பிரிந்தும் உயிர் வாழ நேர்தலால், இறவாமை அவட்குக் கொடு நிலையாயிற்று.

178. மேனியில் அணியும் முத்துமாலையையும் சந்தனக் கலவையையும் வீசும் திங்களொளியையும் நோகின்ருள். மென்கலை தெரியாய் - காதற் செவ்வியினியல் முதலிய நுட்பங்களை யறியும் உயரறிவில்லாத நீ. நீ நீத்த மெலிவிடை நாணிலாக் கயவர்போலப் பகைமை மேவிப் புன்கணை பொழியும்வேள் எனக் கூட்டிப் பொருள் கொள்க. புன்கணை பொழியும் வேள் - புல்லிய அம்புகளைச் சொரிகின்ற மன்மதன். புலம்பு - தனிமை. மெலிவிடைப் பகைமை மேவல் கயவர் தொழிலென வறிக.

179. கூடலிற் றனிமை - நான்மாடக் கூடலிற் றனக்குற்ற தனிமை. எக்கர்க்கூடலை யிழைத்தல் - மணற்றிட்டில் கணவன் வருதல்வாய்வதோ எனக் குறிகாணும் பொருட்டுக் கூடற் சுழியிட்டுப் பார்க்கின்ற வழக்கறிக. வாடலை - நீவாடுதல் வேண்டா. வன்புரை - வற்புறுத்து முரை.

180. ஆம்பற்பண் - தமிழிசைமரபிற் சிறந்த ஒருபண். சாதவிற் பிழைப்புக்காணத்தகும் வழி - சாதலினின்றும் பிழைத்தல் பெறும் வழியென்றும், சாதலே வாழ்வு பெறும் வழியென்றும் இரு பொருள் கொள்க. "சாவது தான் வாழ்வென்று தானம்பலசெய்து" என்ற சிலப்பதிகார அடியை நோக்கிக் கொள்க.

181. பெண்மை யென்ற சொல் அன்பையே வாழ்வாகப் போற்றும் பெயராகும்; அங்ஙனமாகிய இவ்வுண்மையை ஆண்மக்களுணரார். ஆதலால் அவ்வாண்பாலார் தாம் விரும்புவ பலவற்றிடைக் காதலுக்கு ஒரோவோர் பொழுது ஈந்து பிற பொழுதிற் பிறவற்றிற் கருத்தைச் செலுத்தா நிற்பரெனக் கூறியவாறு அறிக.

182. காட்சிக்கின்பந்தரும் அவன் வடிவைச் சுதைமண்ணாலும் இழைத்தமைத்த மாத்தாலும் கல்லினிழைத்த வடிவத்தாலும் அமைத்துக் கொள்ளாது, என் கண்ணகத்தே பதித்து வைத்தேன்.

183. இதனோடு "தாம் வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே, காமத்துக் காழில்கனி" என்ற திருக்குறளை யொப்பிட்டு நோக்குக.

184. கழல்தருங்காளை - வீரக்கழலை யணிந்த காளைபோல்வான். பாலை - பாலையாகிய நிலம் என்றும், பிரிவொழுக்கம் என்றும் இரு பொருள் கொள்க. இதனால் தண்ணிலமாகிய தமிழகத்தின் வேறுபட்ட வெந்நிலமாவது வடநாடெனத் தெளிக.

185. கடலிலாநாடு - பாண்டவர் நாடு கடலில்லதென அறிக. பெண்டிர் கண்களாகிய கடல்களைத் தூர்க்கும் தன் மேனியெழிலாகிய மாரியைப் பொழியும் அருச்சுனன் என்க. கார் - ஆகுபெயராகி நின்று அருச்சுனனைக் குறிக்கும். என் உள்ளமாகிய மலர் உலர்கின்ற தன்மையை மாற்றத் தான் போதுகின்ற வாத்தை யருளாத கொடுமை என்? என்று வினவியதாகக் கொள்க.

186. எனையரும் - யாரும்.

187. குடியில் யாரும் பஞ்சவர் - பாண்டவர் ஐவரும் ஒரு சேரப் பஞ்சவர் எனப்பட்டம் பெறப் பாண்டியர் குடியில் ஒவ்வொருவரும் பஞ்சவர் என்ற பெயராற் சிறப்பர் என வேறுபாடு தோற்றுவித்தமை யறிக. பரவை கால்படிதல் - கடல் கால் கழுவுதல். விஞ்சை - விஞ்சையராகிய தேவகணத்தர். இமையத்து மீன் பொறித்த பாண்டியர்

செய்தியும் சிவபெருமானைத் தடாதகைப் பிராட்டியார் தன் இனிய நகையால் வென்று மணம் புரிந்துகொண்ட செய்தியும் அறிக.

188. என் கற்பு அறம் காழ்த்த உள்ளம், தலைவன் தவற்றை நீ கொண்ட காதலாலே பொறுக்க என்று அடிக்கடி வற்புறுத்தலாலே பெண்மையின் உயர் புகழுக்கு ஊறுபாடு ஆகும் என்று நான் சினங் கொள்ளேன். கோது - குற்றம். குற்றமல்லாற் குணத்தைப் பொருந் தான் என்றபடி. கோப்பெருந் தேவிபோலச் சாதலாலுய்வன் - பாண்டியன் நெடுஞ் செழியன் பெருந்தேவிபோல உயிர்போக்கி வாழ்வு பெறுவேன்; அதனால் தணந்தவனை (பிரிந்த அருச்சுனனை)த் தெறவும் வல்லேன் என்றாள்.

190. வீரத்தமையன் - தருமராசன்.

191. கடவுட்குக் கார் முத்தொழிலான் ஒத்தலின் கடவுட்கார் என்றார். 'கடவுண் மாமழை' யென்றார் திருக்கோவையார் கொளுவி னும். பாக்கம் - பக்கம்; கடற்பக்க மெனினுமாம்.

192. உழுவல் - தொடர்பாடுடைய அன்பு. இன்னல் விலகு மாறு - துன்பம் நீங்கும்படி.

193. முகில் சிறையினின்றும் நீங்கிய பேறு இவளாலாதலின் இங்ஙனம் வழுத்திற்று.

194. தளைபரிந்து தறித்தோய் - விலங்கின அன்பு கொண்டு நீக்கியோய்.

195. சிலை - வில். மருந்து மொழி - அமிழ்தனைய இன்மொழி. ஊர்வசியின் மாலையினை வேண்டாது நீத்தது பாரதத்தா லறிக.

196. எல்வளைகை யிறப்ப மெலிவு - ஒளி பொருந்திய கைவளை கள் கழலுமாறு உண்டாய மேனி மெலிவு. துயர - துயர் கொள்ள.

197. எல்லை கரி - சூரியனே சான்று. இறை - தலைமகன். வல்லை - விரைவு. தொல்லை யுலகு - பண்டைப் பாண்டி நாடு.

198. அற்றம் - உரிய செவ்வி. பொன்றல் - கெடுதல். பொய்யா வானம் - தவறாது பெய்யும் முகில்.

199. இக்கவியின் முதலிரண்டடிகளுள் இந்திரன் ஆரம்பூண்ட தெய்வப்பாண்டியன் சரிதையும், கடல் சுவற வேலெறிந்த பாண்டி யன் சரிதையும், முகிலைத் தளையிட்ட செய்தியும் குறிக்கப்பட்டமை

ஓர்க. விழியினுள் விடுக்க - விழியாள் தளை விடுக்க, தூதுவிடுக்க என்றும் இருபொருள் கூறுக.

200. பதிதணந்திட - தலைவன் பிரிதலால். தன் கூடற்பதி கசந்தவள் - தன் நான்மாடக் கூடற்பதியை வெறுத்தவள். மதியானது கனவாற் காய்வதற்குக் காரணம் கற்பித்தவாறு.

201. ஈச்ச மரமும் பொன் பொதி பூவையுடைய புன்னையும் மணம் ஏந்திய தாழையும் அடும்பும் எவ்விடமும் பொருந்தியுள்ள மணற்பாங்கரில் அன்றில் தன் பெடையொடு நிலவி னிழலிற் களிப்புறுங்கால் இப்பாண்டியன் புதல்வி மயங்குவாள்.

202. தீரம் - கரை. மூரல் - புன்முறுவல். பரவை - கடல். தவளம் - வெண்மை. உவளம் - உணவு. உழக்க - வருந்த. அவள் மயல்வீறு நஞ்சை - 'அவள்பால் காமத்தா' லெழுந்த மயக்கம் மிகும் நஞ்சை. அழிக்கும் அன்பமுதப் பேறு - போக்கவல்ல மருந்தாகிய நிதி. 'பவளவாய்த்......மூரல்' - வாயாகிய கரையில் காதலாகிய கடல் நாள்தோறும் கொழிக்கக்கூடும் முத்துக்கள்போன்ற பற்களின் அழகோடு கூடிய புன்முறுவல். அத்தகைய அமுதப்பேற்றை அவனுக்கு 'மயல்வீறு நஞ்சை' அழிக்குமாறு தன் 'முத்தார் மூரல் தாத்தலை யளித்தாள்,' என்று கூட்டி முடிக்க.

203. நனவுக் காலத்து உன் நினைவால் வருந்துவள். உறங்கின் கனவுகள் அடர்த்தலால் நடுங்குவள். வீழ்வார் - காதலர்; காதலர் அன்பின் மெய்ம்மையை ஐயுறுதார்க்குக்காதலின்கசப்புங் கற்கண்டேயாகும் என்பதை இவள் இயல்பினுற் கண்டேனெனப் பொருளறிக.

204. கற்பகத்து இறை - இந்திரன். கைதவன் - பாண்டியன். கன்னித் தற்பரை கோயில் - கன்னியாகுமரித் திருக்கோயில். உன் தவம் - உன் தவமனைய மனையாள். அவள் அன்பும் அறமும் குழைத் தாற் போன்ற ஒப்பற்ற பிள்ளை அமிழ்தெழு தமிழில் அன்னையின் கற்பறத்தைக் கூறக் கண்டேன்.

205. பொறப்பு, அறிவு, உரனுல் நின்னையும், பொறை, அளி, பெட்பு ஆகிய சால்புகளால் தன் அன்னையையும் வெல்லும் நின்புதல்வன் மழலையை யென்க. கற்பினிலும் அன்பினிலும் தன்னின்மிக்காரையும் ஒப்பாரையும் பெருதவள் என்க.

206. பொற்பாண்டில் - பொன்னாலமைத்த விளையாட்டு வண்டி. முத்தப்படகு - முத்தாற் செய்த விளையாட்டுப் படகு.

207. காதற் பெளவம் - கடல் போன்ற காதல். மூன்று திரைக் கடல் - கிழக்கு தெற்கு மேற்கு என்ற திசைக்கணுள்ள கடல்கள். எழிலி - மேகம்.

208. துவர் - பவளம். செவி மடுத்து - கேட்டு. காதல் நந்துத லறியாத - காதல் குறைதலில்லாத.

209. வது - தலைவி. மம்மர் - மயக்கம். வஞ்சர் பொதுவியலை என்பாற் புணர்த்தி யென்க. புனைவது - மிகுத்துரைப்பது.

210. அவள் சால்பு, செவ்வி, தூயகாதல் முதலியவற்றை அவள் நாட்டுக்கும் என்னாட்டுக்கும் இடைக்கிடந்த சேய்மையும், என்பக்க லுள்ள பிற மனைவியரும் உயர்த்துக் காட்ட. தாய்மை - ஈண்டுக் குற் றங் காணாத் தகவும் அன்பும் என்றறிக.

211. அருச்சுனன் துரோபதையை வில்லானும், சுபத்திரையை இன்சொல்லானும் வென்று மணந்து கொண்ட செய்தி பாரதத்தா லறிக. காதல் முல்லை-அன்பு கொண்ட கற்பறம். ஆர்வலர் - அன்பர். ஆயம் - மகளிர் கூட்டம்.

212. அன்பு, நட்பு, காதல் முதலிய நிலைகட்கு அரும்பு, போது, மலர்கள் உரிய ஒப்பாதலை நன்கு நோக்குக. ஏழையென் றது 201-ம் செய்யுளை நோக்கி.

213. தந்தையும் தன்னையரும் தனயரும் தம்மையாள நாடொ றும் தம்முரிமையின்றி அடிமை கொண்டு வாழும் பெண்டிர் வாழ்வு தமிழகத்தில் வழங்கப்பெற்றதன்று. பெண்பாலாரும் ஆண்பாலாரும் அகவொழுக்கம் புறவொழுக்கங்களில் முறையே தலையாய ஆட்சி யுரிமை பெறுவர். நிரனிறைப் பொருள்.

214. மிதவை - தெப்பம். வடநாடு தென்னாடுகளின் வேறு பட்ட கோட்பாடுகளை விளக்குவது ஓர்ந்துகொள்க. தொழும்பறம் - அடிமையறம்.

216. "கடனென்ப நல்லவை யெல்லாம்" என்ற திருக்குறட் கருத்தை யொப்பிடுக.

217. அற்பு - அன்பு. எற்பிரிந்து - என்னைப் பிரிந்து. இனைவதே - வருந்துவதா ?

218. அகழ்ப்புறத்து - அகழ்க் கிடங்கின் புறத்தே. திகழ்திரு என்பதில் எதுகைநோக்கித் தகரவொற்று விரிக்கப்பட்டது.

219. ஆய்மயில் - அழகிய மயில். அவதி - காலவெல்லை. பேய்மயலமரிற் பேணும் பீழை - பேய் மயக்கத்தைப் போரிற் கொள்ளும் என் துயர். வேய்மயல் கொள்ளும் தோள் - மூங்கிலொப்பாகாமையால் மயங்கும் தோளாள்.

220. வில்லற வேள்வி - வில்லாண்மைக்குரிய கடப்பாடுகள். சேல்விழி சேவகம் - சேல்போன்ற விழியாளுக்குச் செய்யும் காதற் கடன்கள்.

222. வின்மற வீறு வீழ்வார நெஞ்சினன் - வில்லாண்மைச் சிறப்பினை விரும்பும் அன்புகொண்ட உள்ளத்தான்.

## வாழ்த்துப்பா

ஏர் - ஆகுபெயராய் உழவை யுணர்த்தும்.

# பிழை திருத்த அட்டவணை

| பக்கம் | பாட்டு | | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 32 | 131 | | 4 | டொவி | டொவி |
| 33 | 136 | | 2 | தழுவி | தழுவித் |
| 73 | 146 | உரை | 4 | அமுது | அமிழ்து |
| 74 | 148 | ,, | 5 | இழிதவுற் | இழிதகவுற் |
| 77 | 167 | ,, | 2 | னுச்சி | னுச்சிச் |
| 33 | 137 | | 3 | [illegible] | [illegible] |